திருமாலிருஞ்சோலைமலை

# அழகர் கிள்ளைவிடு தூது




ஆசிரியர் :

பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை

விளக்கவுரை :

பண்டித வித்துவான் தி. சங்குப் புலவர்



திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
79, பிரகாசம் சாலை, சென்னை-108
1983

பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை

திருமயிலை வேலுக்கவிராயர் சந்ததி புலவர் (1893—1968)



கிளைகள் :

திருநெல்வேலி-6. மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : ௪௦௯௯
முதற் பதிப்பு : சூலை 1960
மறுபதிப்புகள் : ஏப்பிரல் 1963; மார்ச்சு 1967;
சனவரி 1973; திசம்பர் 1977, செப். 1983

O31, 1L10,1
N. 83

AZHAGAR KILLAIVIDU THOOTHU

திருவரங்கனார் அச்சகம், சென்னை-600 012. (11)

# பதிப்புரை

உயர்தனிச் செம்மொழி என நந்நாட்டறிஞர்களே யன்றி எந்நாட்டறிஞர்களும் எடுத்துக்கூறிப் புகழ்ந்து பாராட்டும் அருமையும் பெருமையும் வாய்ந்தது தமிழ் மொழியாம். நம்மொழியாகிய இம்மொழியிற் காணப் படும் நூல்கள் இலக்கணம், இலக்கியம் என இரு பிரிவாம். இவற்றிற் சங்க இலக்கியம் எனச் சாற்றப் படுவன பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு ஆகிய நூல்கள். பிற்கால இலக்கியங்களைப் பேரிலக்கியம், சிற்றிலக்கியம் எனப் பிரித்தனர் சான்றோர். பெரியபுராணம் கம்ப ராமாயணம் போன்ற நூல்களும், நல்வழி, நன்னெறி, நீதிநெறிவிளக்கம், நீதிநூல் முதலிய நூல்களும், வரலாற்று நூல்களும், பொருள் நூல்களும், இன்ப நூல்களும், வீட்டு நெறி விளக்கும் நூல்களும் பிறவும் பேரிலக்கியம் என்ற பிரிவில் அடங்கும். புலவர்கள் தெய்வத்தின்மீதும், வள்ளல்கள்மீதும் அருளையும் பொருளையும் பெறுவது கருதிப் பாடிய சிறு நூல்கள் (பிரபந்தங்கள்) அனைத்தும் சிற்றிலக்கியம் எனக் கொள்க.

பிள்ளைத்தமிழ், கோவை, உலா, ,அந்தாதி, தூது, கலம்பகம் பரணி இவை போல்வன கடவுளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட நூல்கள் அருள் கருதிப் பாடியவை. மக்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டவை யாவும் பொருள் கருதிப் பாடியவையே. இவை புலவர் தந்நலங்கருதிப் பாடியவையாதலாற் சிற்றிலக்கியம் எனப் பேர்பெற்றன. இளமைப் பருவத்திலிருந்தே உலகிற் காணப்படும் பொருள்கள் ஒவ்வொன்றையும் கண்டு கண்டு அவற்றியல் பினை யறிந்து தெளிந்தவரே பின்னர்ப் பொருளறிஞர் எனப் புகழ்ப்படுவர். அது போலத் தமிழிற் காணப்படும் சிற்றிலக்கியங்கள் பேரிலக்கியங்களின் இயல்பறிந்து தெளிந் தவரே மொழியறிஞரின் முதல்வராவர். நம் தமிழ்

மொழியின் அருமை பெருமை யறிவதற்குச் சிற்றிலக்கியங்களைக் கற்றுப் பின் பேரிலக்கியங்களையும் கற்றுக் கேட்டு வருதல் இன்றியமையாதது.

"அழகர் கிள்ளை விடு தூது" என்பது தூது நூல்களுட் சிறந்ததொன்று. ஏறக்குறைய இருநூறு ஆண்டுகட்குமுன் வாழ்ந்த பலபட்டடைச் சொக்கநாதப் புலவராற் பாடப்பட்டது இது. இந்நூலினை முதலில் ஏட்டிலிருந்து அச்சிற்குக் கொண்டுவந்த பெருமையுடையவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள். அச்சேறிய காலமுதல் இந்நூலுக்கு விளக்க உரை வரைந்து வெளியிட ஒருவரும் முன் வந்திலர். குறிப்புரையுடன இதுகாறும் இந்நூல் உலவியது. வித்துவான் வகுப்புக்கு அடிக்கடி பாடப் புத்தகமாக வைப்பது தெரிந்து, சிறந்த முறையில் விளக்க உரை எழுதி இஞ்ஞான்று அச்சிற் பதித்தனம். மாணவர் பலர்க்கும் மற்றைத் தமிழ்ப்பற்றுடைய பலர்க்கும் இந்நூல் பயன்படும் எனக் கருதுகின்றோம். எம் கழகவாயிலாக இத் தூதுநூல் இப்போதுதான் வெளிவருகின்றது.

தமிழன்பர் பலரும் இந்நூலின் அருமை பெருமை கண்டு மகிழ்ந்து வரவேற்பரெனக் கருதுகின்றோம். பல்கலைக்கழக மாணவர்களும் ஆசிரியர்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் கற்றும் கற்பித்தும் பயனெய்துக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# ஆராய்ச்சி உரை

## தூது நூல்

செந்தமிழ்நாட்டிலக்கியங்களிற் சிற்றிலக்கியம் எனக் கூறப்படும் நூல்கள் பல; கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா, மடல், கோவை, பரணி, தூது முதலியன. பன்னிரு பாட்டியல், வெண்பாப்பாட்டியல், சிதம்பரப் பாட்டியல் போன்ற நூல்களில் இவற்றிற்கு இலக்கணம் அமைந்துள்ளது; பெருங்காப்பியங்களிலும் பிற காப்பியங்களிலும் போர்க்குச் செல்லுமுன்னர்த் தூதுவிடுக்குஞ் செயல் ஒன்றுளது. அது தூது சொல்ல வல்லவன் ஒருவனை விடுத்து வேற்றரசர்க்கு மாற்றரசர் தங்கருத்தை விளக்குவது. இப் பொருளமைந்த பகுதி இராமாயணம், பாரதம், கந்தபுராணம் இவற்றிற் காணலாம். அது குறித்துச் செல்லுந் தூதுவர்க்குரிய இலக்கணத்தினைத் திருவள்ளுவர் தூது என்ற அதிகாரத்திற் கூறியுள்ளார். தூது என்ற தனி நூல்களிற் காதல் கொண்ட தலைவியொருத்தி, தன் காதலன்பால் தனக்கு விருப்பமான ஒரு பொருளைச் சிறப்பித்துக் கூறித் தூது விடுத்ததாகப் பொருள் அமைந்திருக்கும். அப் பொருள் தூது சொல்லி வரும் பொருளாக இருக்க வேண்டும் என்பது முறை. அஃறிணைப் பொருள்களை விடுத்ததாகத் தூது நூல்கள் யாவும் அமைந்திருக்கின்றன. உயர்திணைப் பொருளைத் தூது விடுத்த செய்திகளும் உண்டு. விறலிவிடுதூது என்பது உயர்திணைப் பொருளைத் தூது விடுத்ததாகப் பொருளமைந்துள்ளது. பொருளும் வேறாக அமைந்துள்ளது. காதல் குறித்த தூதுஅன்று அது.

இலக்கண விளக்கம் என்னும் நூலில் "பயிலருங் கலிவெண்பாவினாலே, உயர்திணைப்பொருளையு மஃறிணைப் பொருளையும், சந்தியின் விடுத்தன் முந்துறு தூதெனப், பாட்டியற் புலவர் காட்டினர் தெளிந்தே" எனத் தூதுக்கிலக்கணம் சொல்லப்பட்டுள்ளது. இதனால், உயர்திணைப்பொருளையும் தூது விடுப்பது இயற்கையெனத்

தெரிகிறது. பிரபந்தத்திரட்டு என்னும் நூலில் "எகினமயில் கிள்ளையெழிலியொடு பூவை, சகிகுயிலொஞ் சந்தென்றல் வண்டு -தொகைபத்தை, வேறுவேருப்பிரித்து வித்தரித்து மாலைகொண்டன், கூறிவா வென்றுரைத்தல் தூது" என தூதுக்குரிய பொருள்கள் பத்தெனத் தொகை கொடுத்துள்ளார். அப் பத்தில் சகி என்பதும் ஒன்று. சகி-பாங்கி; தோழி தோழியும் தூதுக்குரியவள் எனத் தோன்றுகிறது. இரத்தினச் சுருக்கம் என்னும் நூலிலும் "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை. பயம்பெறுமேகம்பூவை பாங்கி— நயத்தகுயில், பேதைநெஞ் சந்தென்றல் பிரமரமீ ரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" எனப் பத்துப்பொருள்கள் பகர்ந்தனர். பாங்கி இப் பாவிலும் வந்துள்ளாள். பாங்கி தான் சென்று தூதுரைத்துத் தொடை வாங்கி வரும் பான்மையுடையவள். இலக்கணவிளக்க நூலாசிரியர் "உயர்திணைப் பொருளையும்" என உரைத்தது பாங்கியைக் கருதித்தான் எனத் துணியலாம். காதல் கொண்ட தலைவிக்குத் தூது சென்று காதலன் கருத்தறிந்து வருவது ஆருயிர்ப் பாங்கிக்கே யமைந்த செயலாம். வேறொருவர் இச் செயலை மேற்கொள்ளார் என்பது வெள்ளிடை. இதுகாறும் பாடிய நூல்களித் "பாங்கிதூது" என்ற பெயரமைந்த நூல் ஒன்று கண்டிலம். மயில்,பூவை,குயில் என்பவை மூன்றின்ற தூது நூலும் இதுகாறும் பாடாது மறந்தனர் போலும்.

மேற்கூறிய பத்துப்பொருள்களை விடுத்து வேறு பொருள்களையும் வேறு பொருள் குறித்துத் தூது விடுத்த பொருளமைந்த நூல்கள் பலவுள்ளன. பணவிடு தூது, தமிழ்விடு தூது, மான்விடுதூது, வனச விடு தூது. சவ்வாதுவிடுதூது, நெல்விடுதூது. புகையிலைவிடுதூது, என்பன அவற்றின் பெயர்கள். "மிதிலைப்பட்டிக் கவிராயர் ஒருவர் தம் பகைவனுகிய ஒருவன்மீது வசையாகப் பாடிய 'கழுதைவிடு தூது' ஒன்றுள்ளது கண்டேன்" என டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் குறித்திருக்

கின்றனர். செருப்புவிடு தூது இருப்பதெனத் தெரிகிறது. இவற்றிற் கிலக்கணம் வகுத்தவர் யாவர்? எவ்விலக்கண நூலில் இங்ஙனம் வரையறையின்றிப் பாடுவதற்கு விதி வகுத்துள்ளது? என ஆய்ந்தால் ஒன்றும் இன்றெனவே உரைக்கலாம். புலவர் தத்தங் கருத்திற்கிசைந்தவாறு பெயரிட்டுப் பாடிப் பரிசிலும் புகழும் பெற விழைந்தனர் போலும்.

பாட்டுடைத் தலைவன் பவனி கண்டு காதல் கொண்டு மயங்கிய காரிகை யொருத்தி தன் கருத்தைத் தூதுக்குரிய ஒரு பொருளிடம் கூறியிருப்பதாகப் பொருளமைத்துப் பாடுவதே சிறந்த தூது நூலாகும். அப் பொருள் தூது கூறித் தொடை வாங்கி வரும் இயற்கையுடையதா என்பது ஆராய்ச்சிக்குரியதன்று. அஃறிணைப் பொருள்களையே யமைத்துப் பாடுவது விதியாதலால் அப் பொருள் செல்லும் பொருளும் அன்று; சொல்லும் பொருளும் அன்று என்பது எவர்க்கும் தெரிந்ததே. காம மயக்கத்தாற் கன்னியர் தங்கருத்தி லொருபொருளைக் குறித்து அப் பொருளிடம் காதலைக் கூறுவதுதான் அமைந்த பொருள். "தூது சொல்லி வா" என்பது இதன் முடிவு. அஃறிணைப் பொருள்களிற் பேசும் ஆற்றல் சிறிது பெற்றது கிளி. அதனைத் தூது விடுத்த பொருளமைந்த நூல் இது. ஆதலால், மற்றைத் தூது நூல்களிற் சிறந்தது இந்நூல் எனக் கொள்க.

"அழகர் கிள்ளைவிடு தூது" என்ற இந் நூலொன்றே பழைமையான தூது நூல். புதிதாக "திருப்போரூர்க் கிள்ளைவிடு தூது", "நாராயணசாமி பிள்ளை கிள்ளைவிடு தூது" என இரண்டு நூல்கள் அண்மைக்காலத்தில் இயற்றப்பட்டனவாக அறிகின்றோம். வடமொழியிற் பல கிள்ளைவிடு தூது உள்ளனவெனக் கேட்கின்றோம்.

## திருமாலிருஞ்சோலை

திருமாலிருஞ்சோலை என்பது அழகர் என்னும் தெய்வம் கோயில்கொண்டு வீற்றிருக்கும் பதியாகும். திருமால் —

அழகர். இருமை+சோலை:பெரிய சோலையையுடைய மலை. இம் மலை பழைமையும் பெருமையும் உள்ளது என்பதற்குப் பல சான்றுள்ளன. எட்டுத் தொகையாகிய பரிபாடலிற் பதினைந்தாம் பாடலில் இம் மலைச்சிறப்புக் கூறப்பட்டுள்ளது. ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்திலும் இம் மலைச்சிறப்புக் கூறப்பட்டுள்ளது. பத்துப்பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையில் இம் மலையின் பெயர் வந்துள்ளது. பிற்காலத்தும் பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள் இவர்களும் இத் தலத்தைக் குறித்துப் பாடியுள்ளனர். அழகர் அந்தாதி, அழகர் கலம்பகம், அழகர் பிள்ளைத்தமிழ் அழகர் குறவஞ்சி யென்பன இத் தலத்தைக் குறித்த சிற்றிலக்கிய நூல்களாம்.

## பரிபாடல் பகருஞ் சிறப்பு

பரிபாடல் இம் மலையைப்பற்றிக் கூறும் பகுதி அடியில் வருவது: "அறிவெல்லையால் அறியப்படாத புகழொடு விளங்கிப் பூமியின் எல்லை யேந்திய நிலைமையைவிட்டுப் பெயராத என்றும் அழியாத பழைமையான இசை பொருந்திய புலவரால் ஆராய்ந்துரைக்கப்பட்ட சக்கரவாள முதலிய அழகிய மலைகள் பலவே, அவற்றுள், இந் நிலத்துள்ள மக்கட்குப் பசியையும் வெம்மையையும் நீக்கிப் பலவகையான நிறைந்த பயனெல்லாம் அவர்கள் நுகர்ந்து இன்பம் அடையும்படி பயன்படு மலைகள் சிலவே; அவற்றினுள் பலவகை மலர் பூத்த சுனைகளையுடையவாயும், மேகம் படிந்த உச்சியையுடையவாயும் சிறந்து தெய்வங்கள் தாமாகவே விரும்பி யுறையும் நன் மலைகள் சிலவே. அம் மலைகள் சிலவற்றுள்ளும் சிறந்தது கல்லென்று ஒலிக்கின்ற கடலும் கானலும் போலவும், ஒன்றாகச் சேர்ந்திருக்கும் சொல்லும் பொருளும் போலவும் உருவத்தால் எல்லாம் வேறுபட்டுத் தொழிலால் ஒன்று பட்டு நிற்கும் மாயவனையும் அவன் முன்னோனாகிய பலதேவனையும் தாங்கியோங்கிய இருங்குன்றம் ஒன்றே!"

இவ்வாறு திருமாலிருஞ்சோலையைச் சிறப்பிக்கின்றது பரிபாடல் 15, 1—14. இதனால், பரிபாடல் பாடிய காலத்திற்கு முன்னரே புலவர் பலராலும் போற்றிப் புகழப் பட்டமலை இதுவெனத் தெரிகின்றது.

சிலப்பதிகாரங் கூறுஞ் சிறப்பு

சிலப்பதிகாரத்திற் கோவலன் மதுரை நோக்கிச் செல்லும்போது ஆங்கு வந்த மறையோனொருவன் மதுரைக்குச் செல்லும் வழியில் திருமால் குன்றம் ஒன்றுள்ளது என்று கூறிப் பின்வருமாறு கூறுகின்றான்: "நீங்கள் திருமால் குன்றத்துச் செல்வீராயின் ஆங்கு மிகுந்த மயக்கத்தைப் போக்கும் பிலம் உண்டு. அதற்குட் புகுந்தால் தேவர்களால் துதிக்கப்படும் வியக்கத்தக்க மரபுடைய புண்ணிய சரவணம், பவகாரணி, இட்ட சித்தி என்ற பெயர் பெற்ற பொய்கை மூன்றுள்ளன, நீங்கள் புண்ணிய சரவணத்தில் மூழ்கினால் தேவர்க்கரசனாற் செய்யப்பட்ட ஐந்திர வியாகரணம் என்ற நூலை எளிதாக உணர்வீர்கள். பவகாரணியிற் படிந்தாடினாற் பிறப்புக்குக் காரணமாகிய பழம் பிறப்பு இன்னது என அறிவீர்கள். இட்ட சித்தியி லாடினால் நீங்கள் நினைத்தவற்றை யெல்லாம் பெறுவீர்கள். அதுவன்றிப் பிலத்தினுள்ளே புகவேண்டுமென்று விரும்புவீராயின் மிகவும் உயர்ந்த அம் மலையினுள்ளுறையும் பெரியோனை வணங்கி, அவன் சேவடிகளை மனத்தினிறுத்தி மூன்று முறை வலம் வந்து பணிந்தால் நிலம் பிளக்கும்படி நீர்வீழ்கின்ற அருவி பெருகிவரும் சிலம்பாற்றின் கரையிற் கோங்கமரத்து நிழலில் ஒரு பெண் தோன்றுவள். அவள் இப் பிறவியின் இன்பமும் மறுபிறப்பின் இன்பமும் இவ்விரண்டும் இன்றிச் செம்மையாக நிற்கும் வீடுபேறும் எனக்கு விரித்துரைமின், உரைத்தீராயின் உங்கட்குக் கதவினைத் திறப்பேன், என் பெயர் வரோத்தமை என்பது என்று கூறுவாள். உரைத்தீராயிற் கதவு திறப்பாள். கதவு திறந்து காட்டும் வழிகளில் இடைகழி வாயில்கள் பலவுள. அவை

கழிந்தால் இரட்டைக்கதவுடைய வாயிலொன்று உண்டு. அதற்குமேல சென்றால் வட்டிகைப் பூங்கொடி யொருத்தி வருவள். அவள் ‘வீடுபேற்றின்பத்தை யுரைத்தால் நீவிர் விரும்பிய பொருளைப் பெறுவீர். உரையீராயினும் உங்களை வருத்தஞ்செய்யேன்; நீங்கள் போகக்கருதும் நெறியிற் போக்குவேன்’ என்று கூறுவள். யாரேனும் உரைத்தாராயின் முற்கூறப்பட்ட பொய்கை மூன்றின் கரைக்கட் செலுத்திப் பின் மீள்வள். ஐந்தெழுத்தும் எட்டெழுத்தும் ஆகிய மந்திரங்கள் இரண்டினையும் ஒருமையாக மனத்தினினைத்துத் துதித்து அப் பொய்கையுள் ஒன்றி னீராடினால் அவற்றின் பயன் தவத்தைச் செய்தோர்க்குங் கிடைப்பன வன்று. அப் பயனை விரும்பினீராயின் அம் மலைமீது நின்றோன் மலர்த்தாளை நினையின். நினைத்தால் அப் பொழுதே அவன் கருடப்புள்ளெழுதிய கொடித்தூண் நிற்குமிடத்தைக் காண்பீர், கண்ட பொழுதிலே அவன திருவடி யிரண்டும் உங்களைவேற்றுத் துன்பத்தைப் போக்கும். இன்பத்தையடைவீர். பின் மதுரைக்குச் செல்லுங்கள்.” (சிலப். 11 : 87—138).

இப் பகுதியால் இம்மலை சிலப்பதிகார காலத்திற்கு முன்னரே சிறப்புப்பெற்று நின்றதென்பது தெரிகின்றது. இங்குக் கூறப்படும் பெயர்பெற்ற மூன்று பொய்கைகள் அப் பெயருடன் இப்போதும் இருப்பது இதனை வலியுறுத்தும்.

## வேறு நூல்கள் கூறும் சிறப்பு

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையிற் படைவீடு ஆறு கூறுகின்றார். அவற்றுள் பழமுதிர் சோலை என்பதும் ஒன்றாகும். ஈற்றில் “பழமுதிர் சோலை மலைகிழ வோனே” என்று கூறியது இத் திருமாலிருஞ்சோலையே என்று தெரிகிறது. நக்கீரர் முருகாற்றுப்படை பாடிய காலத்தில் அது முருகன் படைவீடாக இருந்ததுபோலும். பின்னர்த் திருமாற்குரிய தலமாகச்

சிறந்தது போலும். முற்காலத்தில் முருகக் கடவுள் இருந்தனரென்பதற்குரிய அறிகுறிகள் இன்றும் உள்ளன வென அறிஞர் புகல்கின்றனர். சங்ககாலத்திற்குப்பின் தோன்றிய நூல்கள் பல அறுமுகன் படைவீடாறனுள் ஒன்ருய் இச் சோலைமலையை எடுத்துக் கூறுவதும் இதனை யுணர்த்தும். அருணகிரிநாதர் பாடிய திருப்புகழிலும் இச் சோலைமலை முருகற்குரிமையுடையதாகப் பாடப்பட் டுள்ளது. இஞ்ஞான்று அழகர்க்குரிய சிறப்பு மலையாகத் தான் அமைந்து நிற்கிறது அது.

## தலப்பெயர்

அலங்காரன்மலை, அழகர்கோயில், அழகர்மலை, இருங் குன்றம், குலமலை, குளிர்மாமலை, கொற்றமலை, கோலமலை, சிங்காத்திரி, சீர்பதி, சோலைமலை, திருமலை, திருமால் குன்றம், தென் திருப்பதி, நிலமலை, நீண்டமலை, பழமுதிர் சோலை, பழமுதிர்சோலைமலை, மாலிருங்குன்றம், வனகிரி என்பன இத் தலத்திற்குச் சிறப்பாக வழங்கப்படும் பெயர்கள்.

## அழகர், நாச்சியார் பெயர்

அலங்காரர், கள்ளழகர், சுந்தரத்தழகர், சுந்தரத் தோளர், சோலைமலைக்கரசு, தெய்வசிகாமணி, மலையலங் காரர், மாலலங்காரர், பரமசுவாமி என்பன இத் தலத்துப் பெருமானைக் குறித்து வழங்கப்படுகின்றன. நாச்சியார் பெயர், சௌந்தரவல்லியென்றும், கல்யாணசுந்தரவல்லி யென்றும் வழங்குகிறது. ஆண்டாள் அமர்ந்திருக்கும் திருக்கோயில் தனியாக உளது.

## தீர்த்தம்

இத் தலத்தின் முதன்மையாகிய தீர்த்தம் சிலம்பாறு என்பது. அது தேனுறு, நூபுரகங்கை, பகவன்பாத தீர்த்தம், மஞ்சீரநதி எனவும் பெயர்பெறும். இது திருக் கோயிலுக்கு வடக்கே நான்கு கிலோ மீட்டர் தூரத்தில்

இருக்கிறது. அக்கினிவாவி, அனுமதீர்த்தம், இட்ட சித்தி, உத்தமநாராயணவாவி, கதலிவாவி, கருடதீர்த்தம், பண்டாரிவாவி, பவகாரணி பாண்டவ தீர்த்தம், புண்ணிய சரவணம், பெரிய அருவி, வேணு தீர்த்த முதலிய பல தீர்த்தங்களும் உள்ளன.

## கோயின் மரம்

கோயின் மரம், முதல் யுகத்தில் ஆலமரமாகியும், இரண்டாவது யுகத்தில் அரசமரமாகியும், மூன்றாவது யுகத்தில் வில்வமரமாகியும். நான்காம் யுகமாகிய இக் கலி யுகத்தில் புத்திரதீபம் என்ற பெயருடையதாகியும் நிற்கும் இந்மரம் உண்டு என்று இந்நூல் கூறுகின்றது. சிலம் பாற்றுத் தொடக்கத்தில் ஆலமரம் இருந்தது என்றும், சந்தனமரம்தான் கோயின் மரமாக முன் இருந்தது என்றும், சிலப்பதிகாரத்திற் கூறிய கோங்க மரமே யிருந்தது என்றும், உறங்காப் புளியே இருந்தது என்றும், சோதிமரம் என்று ஒன்று இருந்தது என்றுங் கூறுவர். உண்மையாய்ந்தறிக.

## மண்டபம்

இக் கோயிலுக்குரிய மண்டபங்கள் பலவுள்ளன சிலம்பாற்றங்கரையில் அமைந்துள்ள மாதவி மண்டபம், சம்பல் போடும் மண்டபம் என்று பெயர் வழங்கும் பதினாறு கால்களையுடைய சோலைமலை மண்டபம், கல்யாண சுந்தரவல்லி நாச்சியாருக்குக் கனுத் திருவிழா நடை பெறும் கனு மண்டபம், அழகர் எழுந்தருளி வந்தமரும் வண்டியூர் மண்டபம், தேனூர் வாழ்வோர்களாற் கட்டப் பட்டு அழகர் எழுந்தருளி வந்தமரும் இடமாகிய தேனூர் மண்டபம் ஆகியவை சிறந்தன.

## அழகரை வணங்கிப் பேறு பெற்றோர்

அம்பரீடன், அருச்சுனன், அனுமன், இந்திரன், கருடன், கந்தருவன் ஒருவன், சந்திரகேது, தருமதேவர்,

தாலப்பியர், பச்சைவாரணதாசர், பராசரர், பாண்டவர், பிரகலாதன், பிரமன், புரூரவசு, மலயத்துவசன், மார்க்கண்டன், மாவலி, கௌதமன், சௌனகன், மரீசி, மைத்திரேயர், சதிரிளமடவார் முதலிய பல மன்னரும் முனிவரும் வந்து வணங்கிப் பேறுபெற்றன ரெனத் தலபுராணங் கூறுகின்றது. புண்ணியமும் யானையும் போற்றிப் பேறு பெற்றன என்றும் புகல்கின்றது அது.

## வேறு கோயில்கள்

அழகர் கோயிலை யடுத்துப் பல பெயர்களுடன் வேறு கோயில்களும் இருக்கின்றன. நாகநாதர் கோயில், இராக்காயி அம்மன் கோயில், அனுமன் கோயில், கருடன் கோயில், பாண்டவர் கோயில், சதிரிளமடவார் கோயில், சக்கரத் தாழ்வார் கோயில், தண்டலைக் கோயில், வெள்ளி மலைக் கோயில் என்பன அவை.

## விழா

இந்நூலிற் சிறப்பித்துக் கூறப்படும் கோடை விழாவே தலைமையான விழாவாம். இது சித்திரைத் திங்கள் நிறை நிலா நாளில் நிகழ்வது. இவ் விழாவில் அழகர் கோயிலை விட்டு எழுந்தருளும்போது ஆண்டாள் சூடிக்கொடுத்து விடுத்த பூங்கோதையைப் புனைந்து செல்வது வழக்கம். வைகாசித் திங்களில் வசந்த விழா நடைபெறும். பத்து நாள் வரை நிகழ்ந்து பின் முடிவுறும் அவ் விழா. ஆனித் திங்களில் நிகழும் விழாவிற்கு முப்பழ விழா என்று பெயர். முக்கனிகளும் அழகருக்குப் படைத்து வழிபடுவர். நிறைநிலா நாளில் தான் இதுவும் நடைபெறும். ஆடித் திங்கள் மறை நிலா நாளிற் கருடசேவை என்ற விழா நிகழும். ஆவணியில் திருப்பவுத்திர விழா ஐந்துநாள் நிகழும். புரட்டாசியில் ஒன்பதிரவு (நவராத்திரி) விழாவுண்டு. எண்ணெய்க் காப்பு விழா ஐப்பசி வளர்பிறை பன்னிரண்டில் தொடங்கி நிகழும். திருக்கார்த்திகை விழா, அத்தியயன விழா, சட்டத்தேர் விழா, திருக்கல்யாண விழா இவை முறையே கார்த்திகை மார்கழி பங்குனி

இறுதியாகிய திங்களில் நடைபெறுவன. சிறந்த விழாக்களே இங்கு எடுத்துக் கூறப்பட்டன. மற்றுமுள்ள விழாக்களை ஆய்ந்து அறிக.

## பொருள் அமைவு

அழகர் கோடைத் திருவிழாவிற் பவனிவரக் கண்டு மயல்கொண்டு வருந்திய தலைவியொருத்தி தான் வளர்த்த கிளியை நோக்கித் தன் வரலாறு கூறி 'அழகர்பாற் சென்று மாலை வாங்கி வா' வென்று கூறித் தூது விடுத்த தாக ஆசிரியர் பொருளமைத்திருக்கின்றார், கிளியின் மாண்பினை அத் தலைவி கூறி விளிப்பது முதற் பகுதி. அழகர் என்ற பாட்டுடைத்தலைவர் மாண்புரைத்து அரசர்க்குரிய பத்து அங்கங்களையும் எடுத்துக் கூறுவது அடுத்த பகுதி. கோடைத் திருவிழாவில் அழகர் பவனி வந்த சிறப்பினை விரித்துரைப்பது மூன்றாம் பகுதி. நான்காம் பகுதி, தலைவி தன்னிலைமையைக் கிளிக்குணர்த்துவதும், தூதுரைக்குந் தகுதியுடையை நீயே எனப் புகழ்வதும், அழகர் அமர்ந்திருக்கும் இடமும் அமையமுங் கூறித் தூதுரைத்துத் தொடையல் வாங்கி வருகவென விடுப்பதும் எடுத்துரைக்கின்றது.

## கிளியை விளித்தல்

தலைவி கிளியை நோக்கிக் "கிளியரசே! நீ திருமால் பெயராகிய அரி என்ற பெயரைப் பெற்றனை; அவர் படுத்துறங்கும் ஆலிலையின் பச்சை நிறமுங் கொண்டனை; மன்மதனுக்குப் பரியாகி அவனையும் மேற்கொண்டாய்; எல்லார்க்கும் இன்பஞ் செய்கின்றாய்; எல்லாரும் காதல் மிகுந்தபோது உன் சொல்லையே கேட்க விரும்புகின்றனர்; சூரியன் பச்சைக் குதிரைகள் ஏழும் கூடி ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரை அருணன் என்னும் பாகன் செலுத்த இழுத்துச் செல்கின்றன. நீயோ சக்கரமில்லாத தாற்குறிய மன்மதன் தேரைப் பாகனுமின்றித் தனியே இழுத்துச் செல்கின்றாய்; அக்குதிரைகள் ஏழும் உனக்கிணையாகுமோ? சுகம் என்பது நின் பெயர். அப்பெயர்

அமைந்த முனிவர் பிறந்த போதே ஞானியாயினர். கிளி
வடிவங் கொண்ட தாய் வயிற்றிற் பிறந்ததும், சுகம் என்ற
பெயர் அமைந்ததும், அவர் ஞானியாவதற்குக் காரணம்
அன்றோ? ஐந்து வண்ணம் அமைந்தவையே எல்லாப்
பறவைகளும். கிளிகளுள் ஒவ்வொன்றிற்கு ஐந்துவண்ண
மும் உண்டு. பறவைகளெல்லாம் கிளிக்குலமாகிய உன்
குலத்துள் அடங்கும். பார்ப்பதிபோலப் பச்சைநிறமுடை
யாய்; மூக்குமட்டுஞ் சிவந்துள்ளது. வாய்குழறிப் பேசு
வோரை ஒருவரும் மதியார்; நீ வாய்குழறிப் பேசினும்
மதிக்கின்றனர்! என்ன காரணமோ? சிவகன் மனைவியரிற்
காந்தருவதத்தை மிகவுஞ் சிறப்புடையவள்; அவள் சிறப்
படைவதற்குத் தத்தை என்றஉன் பெயரே காரணம் ஆம்.
உனக்குத் திருமால் பெயரும் சிவன் பெயரும் கற்பித்தால்
கற்றுச்சொல்வாய்; மற்றப் பறவைகட்குக் கற்பித்தாற்
பயன் யாது? யோகி தன் கூட்டைவிட்டு வேறு கூட்டிற்
புகுகின்றான்; அவனுயிர் மட்டுங் கூட்டிற் புகுகின்றது;
நீயோ உடம்புடனே வேறு கூட்டிற் புகுகின்றாய். யோகி
யினும் நீ சிறந்த யோகியாவாய். உனக்குக் கீரம் என்று
ஒரு பெயருண்டு; அச் சொல் பால் என்ற பொருளையும்
தரும். ஆகையால், உனக்கு ஆடை யுடுத்துவர், பாடகம்
காலாழி பூட்டுவார்; நீயும் ஒருபெண்கொடி போலிருப்பாய்.
சுகவடிவு கொண்டது. சாயுச்சிய பதவி, அப்பதவி உன்
பெயரமைந்த பதவியல்லவோ? உனக்கு வன்னியென்பது
பெயர்; அது நெருப்பிற்கும் பெயராயமைந்துள்ளது.
நெருப்பிற்பட்ட பொருள் எல்லாம் தூய்மையுடையனவாம்
என்று கருதியோ உன் வாய் எச்சிற்பட்ட பழங்களை
எல்லாம் இனியனவெனக் கருதி எடுத்துண்கின்றனர்!
உன்னைப்போலப் பேசவல்லவர் ஒருவருமிலர். யோகப்
பயிற்சியின்றியே என்றும் பச்சைப் பிள்ளையாயிருக்கின்றனை
நீ: திருமாலைப்போல நீ பாலனத்தாற் பசி தீர்ப்பாய்;
பூசையை விட்டவர் முகத்தில் விழிக்கமாட்டாய்; மாதர்
வளர்க்க வளர்வாய்; உறவில்லானைக் கண்டால் அகல்
வாய். கருடன்போல இருவடிவு கொண்டாய். அரங்கர்
பெயரையே யுரைப்பாய்; ஆடவர், மகளிர் மனமகிழ வாய்

முத்தங் கொடுப்பதுபோல நீயுமவர்கட்கு முத்தங்கொடுக்க முகம் கோணும். முத்தங் கொடுத்ததனால் அவர் வாயிதழ்ச் சிவப்பு ஒட்டியதுபோல உன் 'மூக்குச் சிவந்துள்ளது. ஒருவருக்குந் தோன்ரு வுருவமுடைய மதனை நீ இழுத்துத் திரிகின்ருய். உனக்குக் குறையுளதோ? இல்லை. வாயுவும் உன் பின்னே வருகின்றது. திருமகளும் பார்வதியும் உன்னைச் செங்கையிற் பிடிக்க அவர்கட்கும் நட்பாயினை. பார்ப்பதி நிறமும் திருமால் நிறமும் நின் நிறமும் பச்சையாக வந்த விதம் எந்தவிதமோ? மாதர் விரலின் நகம் உன் மூக்குப்போல இருப்பதால்தான் கையைப்பார்த்தும் பின் கண்ணுடியைப் பார்க்கும் வழக்கம் பண்டைக்கால முதல் தோன்றியது போலும். கிளையில்லாப் பெருஞ் செல்வம் பயன்படுமோ? நீ விரும்பிப் பற்றினல் மாம்பழம் பெருமைபெறும். பற்ருத பழம் அழுகிச் சாறு வடிந்து சக்கையாகப் போம். அன்னம் உன்னுடைய உணவு. குயில் சின்ன வடிவுடையது. வண்டு முடிச்சவிழ்த்து மதுவுண்டாற் பின்பு மயங்கும். கரும்புருவும் பேச வாயுடையதோ? இல்லை. மயில் பிணிமுகம் என்ற பெயருடையது. ஆதலால் நின்போலச் சுகவடிவுள்ளது அன்று நீ கல்வி கேள்வியுடையாய். உன் செல்வத்திற் சிறிது அள்ளித் தெளித்தனைபோலும் நாகணவாய்ப் பறவைக்கு; அதுவும் சிறிது பேசுகின்றது. காமன் சிவன்மேற் போர்க்குச் சென்று நெற்றிக்கண்ணெருப்பால் வெந்து கருகினன். அவன் வில் நாணுகிய வண்டுங் கருகி நிறங் கறுப்பாயிற்று. சின்னமாகிய குயிலும் கருகி நிறங் கறுப்பாயிற்று. நீதான் மறுப்படாமற் பச்சையாக வந்தாய்போலும். மாம்பழம் கண்டால் விரும்புவாய், காய் பூவைக் கண்டால் முகத்தை அவற்றின் பக்கம் திருப்பாமற் செல்லுவாய். தினையரிந்த தாளை விட்டு நீங்காமலிருப்பாய், மனிதருடன் பழகுவாய். எல்லாரையும் முறைகூறி யழைப்பாய். வண்டு வாய் குழறும்; குயில் மாமரத்திலிருந்து கத்தும்; கிளிப்பிள்ளை சொன்னதைச் சொல்லும் என்று யாவரும் சொல்லும்படி நற்பேர்பெற்ருய். நீ பால் குடிக்கும் பச்சைக் குழந்தையாயினும் நின் கால் பிடிப்பார் கோடி பேர் இருப்பார்.

காமநோய் தீர்க்கும் பச்சிலை மருந்து போல உன் உருவம் காணப்படுகிறது. காம மயக்கமாகிய காட்டை எரிப்பதற்காக நீ வன்னி எனப் பெயர் பெற்று வந்தனையோ? காமம் என்ற யானையைக் கொல்லவோ அரி எனப் பெயர் பெற்ருய்? விரகம் என்னும் படையை வெல்லவோ கிள்ளை யெனப் பேர் பெற்ருய்? மாதர் துன்பங் கெடுக்கவோ சுகம் என்ற பேர் பெற்ருய்? உன்னைச் சேர்ந்தவர் துயரம் அடைவாரோ? இரதி கலைமகள் இவர்களுக்கு உன்னை உவமையாகக் கூறுவர் புலவர் என்ருல் நீ தானே அவர்களினும் உயர்வுடையை? மாயன் கொடியிலிருக்கும் கருடன் வடிவே உன் வடிவம், உன்சிறகுகள் கண்ணன் குழலூதிய காலத்துத் தழைத்த பசுந்தழையின் நிறமோ அல்லது இராமன் இராவணனை யழித்தபோது வீடணன் சென்று புதிதாக இலங்கையிற் கட்டிய தோரணமோ? நீ பேசு மொழிதான் கண்ணன் வேய்ங்குழலிசையோ? கிளிப் பிள்ளையே! கிள்ளையே! அவந்திநையே! தத்தையே! வன்னியே! அரியே! சுகமே! இமையே! விழியே! விழியிலுறை பாவையே!'' என்று விளிக்கின்ருள்.

பாட்டுடைத் தலைவன் புகழ்ச்சி

"நரசிங்க வடிவமாய்த் தூணிற்ருேன்றி இரணியன் என்ற அசுரனை உடலைப் பிளந்து கொன்றவன்; நிலக் காவல் பூண்டவன்; பூமி முழுவதையும் உண்டவன்; பூதனை யென்ற பேய்ப்பாலைப் பருகியவன்; உரலிற் கட்டப்பட்டுச் சென்று மருதமரங்களை முரித்தவன்; கிள்ளைத்தன்மை நீங்காதவன்; திருப்புயத்தின் அழகுகண்ட மாதர் மடலேறக் கருதுதற் கேதுவாகிய வடிவழகன்; கருங்கல்லைப் பெண்ணுக்குங் காலினன்; 'கணிகண்ணன்' என்ற திருமழிசையார் பாடல் கேட்டுப் பாம்புப்படுக்கையைச் சுருட்டிப் பாரமாக முதுகிலிட்டுப் பின் சென்றவன். தேவர்க்காக அமுதங் கடைந்த செங்கையான். சீதையுடன் கானகத்திற்குச் சென்றவன். சரன் என்ற வேடனுக்குத் தன் கால் நகங்களைக் காட்டி அவன் அம்பெய்யும்படி செய்து பின் வீடு கொடுத்தவன். என் காதல்

வெள்ளத்துள் மூழ்கியவன். கடல் வெள்ளத்தின்மேல் மிதந்தவன். மக்கள் உள்ளத்தில் உள்ளே வந்தமர்பவன். உலகமெல்லாவற்றையுங் கடந்து நிற்பவன். வெட்ட வெளியில் நின்றும் ஒருவராலும் அறியப்படாதவன். கிட்ட விருந்தும் ஒருவர் கண்ணிற்கும் புலப்படாதவன். மாயன் என்ற பெயர்ப் பொருளுக்கேற்ப எல்லார்க்கும் மறைந்து நிற்பவன். கண்ணன் என்ற பெயர்ப் பொருளுக் கேற்பத் தன்னை யாவர்க்குங் காட்டுவோன். எங்கும் இல்லையெனவும், எங்கும் நிறைந்திருக்கிறான் எனவும் கூறும்படி ஒளித்தும் வெளிப்பட்டும் உறைபவன். தன்னை யறியாமல் மயங்கும் எனக்குத் தன் வடிவங் காட்டும் தம்பிரான். பழவினையைக் கெடுத்து மும்மலங்களையும் களைந்து என்னைத் தனியாக இருத்தியவன். பிரமனும் நான், பிரமன் படைத்த உயிர்களும் நான், அவ்விருவ ரையும் ஏவுவோனும் நான் என்பதைக் காட்டுவதற்காக, முன் கண்ணனாக மாடு மேய்க்குங் காலத்தில் பிரமன் ஒளித்து வைத்த ஆன்கன்றுகளும் சிறுர்களும் தானே யாகிச் சென்றவன். நரகத்தைவிட்டு நீங்குவதற்கு நீங்கள் தவஞ் செய்யவேண்டா; என் சங்கொலி கேட்டாற்போதும்; ஓர் உடலில் உயிரைக் கூட்டுவதற்குப் பிரமன் வேண்டா: என் வேய்ங்குழலிசையே போதும் என்று காட்டுவது போலத் தன்சங்கினை வாய்வைத்தூதி, அவ்விசைகேட்டவ ரனைவரையும் நரகத்தின் விழாது தடுத்தவன். பட்ட மரங்களும் தளிர்த்து, உயிர்பெறும்படி வேய்ங்குழலூதி யவன். பரம்பொருள் இவனே, ஆதிமூலம் என்றழைத்த போதே வந்து, 'கசேந்திரன் என்ற யானையைக் காத்தான்' என்று யாவர்க்கும் தெரியும்படி காக்குஞ்செயல் புரிந்தவன். படைப்பவனும் நானே, துடைப்பவனும் நானே என்று செயலாற் காட்டுவது போலத் தன் உந்திக்கமலத்திற் பிரமனைத் தோற்றுவித்து உலகைப் படைப்பவன். உக முடிவு காலத்தில் தன் வாயா லுலக முழுவதையும் விழுங்கு பவன். நான்கு வேதங்களின் பொருள்களையும் நாலாயிரங் கவிகளாற் பாடிய ஆழ்வார் பதினொருவருள்ளத்திலும் அமர்ந்திருப்பவன். செந்தாமரை மலரினின்று வழியுந்

தேன்போலத் திருவடியிலிருந்து கங்கையாறு வடியும்படி உயர்ந்து நின்றவன்; உலகம் அறிவும் அறியாமையும் உடையது என்பது எவர்க்கும் தோன்றும்படி அறிதுயிலமர்ந்தோன். தாய் அசோதைக்கு வாயைத் திறந்து காட்டி உள்ளே பூவுலக முழுவதையும் காண்பித்துத் தன் உள்ளும் புறத்தும் உலகமிருப்பதை யுணர்த்தியவன். பிறவிக்கடலிற் றோன்றும் அஞ்ஞானமாகிய உவரை நீக்குவதற்கு மேகவடிவங் கொண்டவன். பிற சமயப்பேர் என்ற யாறுகள் வந்து கலப்பதற்காகக் கருங்கடலுருவமானவன். தன்னுருவ வொளியில் என்னுருவ வொளியையும் அடக்குவதற்காக நீலமணி நிறங்கொண்டவன்; புலியாகிய ஊசலின்மேலிருப்பவனும் அதனை யாட்டுவோனுமாக உயிர்க்குள்ளுயிரா யுறைபவன்; வேடர் பார்வை மானைக் கட்டிப் பல மான்களைப் பிடிப்பதுபோலத் தன் பிறவி பத்தினால் என் பிறவி யெண்பத்து நூனுயிரமும் தொலைப்பவன்; இடபகிரி என்ற சோலைமலையில் வீற்றிருப்பவன்; சிலம்பாறுடையவன்; தென்பாண்டி நாடுடையான்; சீர்பதியான திருப்பதியான்; பசுந்துளபமாலையான்; அத்துவித மதமாகிய யானையுடையவன்; வேதப் பரியுடையவன்; கருடக்கொடியுடையான்; சிங்கம், யானை, மேகம் ஆகிய மூன்று முரசுடையவன்; அவன் அசையாமல் அணுவசையாது என்று உறுத் தவநிலையாகிய ஆணையைத் தரித்தவன்; கண்ணனாகப் பிறந்து வெண்ணெயை எடுத்துண்டவன்: சங்குசக்கரந் தாங்கியவன்; உலக முழுவதையும் உண்ட வாயன்; ஒடுங்கிய வயிற்றன்; படைத்த உந்தியான்; அளந்த திருப்பாதமுடையவன்; இரந்து வாங்கிய கையுடையான்; விளையும் பச்சைப் பயிரின் நிறங்காட்டும் திருமேனியுடையான்; பூமியைத் தோண்டிய கொம்புடையவன்; ஏந்திய முதுகுடையவன்; பாம்புப்படத்தைப் பாயாகக் கொண்டோன்: தன் பெயரை நினைத்துத் திருநாமமிட்டவர்க்கு இகத்தும் பரத்தும் இன்பந்தருவோன்; எட்டெழுத்தைக் கருத்திலிருத்திக் கூறித் துதிப்பவர்க்குப் பிரமன் படைக்கும் பிறவியில்லாமற் செய்வோன்; ஈசன் முதலிய தேவர் யாவரும் எங்கள்

மலையே இதுவென்று வந்து தங்கும் நண்புடையோன்; பச்சைவாரணதாசருக்குக் கண்கொடுத்தவன்; யானைக் கன்றுக்கும் கண் கொடுத்தவன்; அஞ்சு படையுடையான்; உத்தியோகச் சக்கரமுடையவன்; முன்பு பொன் னிலங்கையை வெற்றியாற் பெற்றுப் பூவுலகை மாவலிபால் இரந்து வாங்கியவன்; திருவரங்கத்தில் உறையும் பெருமாளைப்போல ஆண்டாளுக்கு அன்றி எவர்க்கும் பூமாலை கொடாதவன்; சங்கத்தழகன் எனப் பேர் பெற்றவன்; திருப்பாதுகைக்கும் கருடனுக்கும் அரசு தந்தவன்; சவுந்தர வல்லியுடனியைந்த சுந்தரராசன் இவன் என்று சொல்லும்படி விளங்குவோன்! சுந்தரத் தோளன்; மலையலங்காரன் என்ற பெயருடையவன்; புண்ணியங்கள் வந்து பூசிக்கத் தெய்வமாய் நின்றவன்; மலையத்துவசனுக்கு வேண்டும் வரம் தந்தவன்; அம்ப ரீடனுக்குத் தன் பாதமலர் தந்தவன்" என்று அழகரைப் புகழ்ந்து கூறினள் அத் தலைவி.

## கோடைத் திருவிழா

அழகர் கோடைத் திருவிழாக்காலத்தில் எழுந்தரு ளினர். சோலைமலையிலிருந்து வந்த வெள்ளமெல்லாம் வையையிற் சென்று தேங்கியதுபோல அத் தலத்து மக்கள் யாவரும் வையையாற்றங்கரை வந்தெய்தினர். தல்லா குளம் வந்து சார்ந்தனர் அழகர். பின்னர்ச் சோமச் சந்திர விமானத்தில் ஏறி வையைக்கு வந்து சேர்ந்தார். மண்ணுலகின்மேல் விண்ணுலகம் வருகின்றதோ? இந்திர விமானமோ? அட்டாங்க விமானமோ? என ஐயுற்றும் பின் அவருக்குரிய சோமச்சந்திர விமானமே இது வென்று கண்டோர் கூறும்படி இருந்தது அக் காட்சி. அப்போது சூரியனுதித்தான்; அத் தோற்றம் அவ் விமானந் தாங்கு வோர் பலமாகத் தூக்கும்போது பாரம் சேடன் முடியை அழுத்த, அதனால் அவன் முடியிலிருந்து ஒரு நாகமணி தெறித்து மேலெழுந்ததுபோலிருந்தது. குதிரை நம்பிரான்மேல் அழகர் ஏறிச்சென்று கோடி செங்கதிரும் கோடி வெண்மதியும் உதித்தனபோலச் செம்பொற்

கொடியும் வெண்குடையும் தோன்றவும் மேகமும் இடியும் போல யானையும் அதன்மேல் ஏறிய முரசமும் முழங்கவும், நீர்வீசுந் துருத்தி மழைபோல் நீரைச் சொரியவும், கேட்ட வரத்தை யன்பர்கட்குத் தருங் கிணறுபோலக் காணிக்கை வாங்கிக் கோடிக் கணக்கான கைகள் போடுவதற்கிட மாகிய ஆணிப்பொற் கொப்பரை முன் வரவும், மக்கட் கூட்டம் வையையாற்றுட் பரந்துநின்று வெள்ளங் கரை கடந்ததுபோலக் கரையேறி நெருக்கமாக நிற்கவும், அக் கரையின்பாலுள்ள ஆயிரக்கணக்கான திருக்கண் மண்டபங்களிற் சென்று சென்று தங்கிப் பின் வண்டியூர் மண்டபம் வந்து சேர்ந்தார், பகல் மறைந்து இரவாயிற்று. ஆதிசேடன் வாகனமாகி அழகரைத் தாங்கப் பவனி புறப் பட்டார். முன் அழகர் பகலை இரவாக்கினர். இப்போது இரவைப் பகலாக்கினர் என்று கூறும்படியும் தீக்கடவுள் வந்து சேர்ந்ததுபோலவும், சந்திரன் வந்து சார்ந்து பணிவதுபோலவும், இரவில் கைத்திவட்டிகளும் வாணக் காட்சிகளும் இருளைப்போக்கி ஒளியை யாக்கி இலங்கின. அவ்வமயம் விளக்கொளியோடு ஒளிமயமாய்ப் பவனி வந்த திருமாலைக் கண்டேன் என்றான்.

### தலைவி தன்னிலைமையைக் கிளிக் குணர்த்துவது

பின்னர் அழகரை வணங்கினேன். முன்னழகைக் கண்டவுடன் மோகமுற்றேன். பின்னழகைக் கண்டாற் பெருந்துன்பம் விளையும் என்று கருதி மற்றைப் பெண்களை நோக்கி, "நான் எழுந்தேன்; திருமுகமும் அவள் மார்பில் உறையும் திருமுகமும் கண்டேன்.'' அருகில் நின்ற மாதரை நோக்கி, "இவனை அரவணையான் என்று கூறுவர். அன்றியும், சிவனைப்போல இரவணையான் என்று கூறு வதும் உண்டு, பரவைத் திருவணையான் என்பது மட்டும் பொய் என்று கூறினேன்." பின் அழகரை நோக்கி, "வெண்ணெய் திருடியதுபோல வளையலையுங் களவு செய்தீரோ? மங்கையராகிய எங்கள் கொங்கை மலைமேல் விழுங் கண்ணருவி சோலைமலை யருவிபோலக் குளிர்ச்சியா யிருக்கிறதோ? எங்கள் சேலையையுந் திருடினீரே !

பழைய திருட்டுத் தொழிலைத் தொடுத்துச் செய்யத் துணிந்தீரோ? நாங்கள்கூறுமொழி செவியிலேறவிலையோ? பாற்கடலிற் றூங்கியதுபோல வையையாற்றிலுந் தூங்கு கின்றீரோ? பெண்ணென்றாற் பேயுமிரங்கும் என்பரே! நீர் ஏன் இரங்காது செல்கின்றீர்? எம்மை யணைந்து இன்பந்தந்து செல்வீர்'' என்று காமமயக்கத்தாற் புலம்பினேன். நான் புலம்பி நிற்க என் வேண்டுகோளை ஏற்காது தேனூர் மண்டபஞ் சென்று தங்கி மீண்டுஞ் சோலைமலையை யடைந்தார். நான் யானையுண்ட விளங் கனியானேன். வெண்ணிலவும் அலைகடலும் அயன் மகனிரும் அனங்கனும் விடைமணியும் வேய்ங்குழலும் எனக்குப் பகையாகி என்னுயிரைக் கவர அமையம் பார்த்து நிற்கின்றன. நான் என்செய்வேன்! (பசலைநிறம் பாய்ந்து என் கூடு உன்கூடு போலாயிற்று. ஆதலால், இருவரும் உடம்பு பச்சையாயிருப்பதால் ஒத்திருக்கின்றோம். வேறுபாடின்று) உனக்குப் பாலூட்டுவேன்; நீராட்டுவேன்; பட்டாடையால் துடைப்பேன். உன்னைக் கூட்டில் அரசியைப் போலிருக்க அமர்த்துவேன். ஆலத்தி யெடுத்துக்காட்டி அகிற்புகையும் காட்டுவேன்; இள வெயிலிற் காயவைத்து முத்தங்கொடுத்து என் கையில் வைத்து அழகர் திருப்பெயரனைத்துங் கற்பிப்பேன். எனக்கு நீ ஒருதவி புரிவாய்'' என்றாள்.

'தூதுக்குத் தகுதியுடையை நீ—எனச் சொல்லுதல்

'வெள்ளை யன்னத்தைத் தூதுவிடுத்தால் அது சொல் லுமோ? அது சூடுபட்டது எனத் தெரிகிறது குயில் தாய்க்குதவாப் பிள்ளை. அஃது எனக்கு உதவி புரியுமோ? வண்டு மதுவுண்டு மயங்கி அரி என்று கற்பித்தால் அளி எனறு சொல்லும். தெற்கு எமன் திசை. அத் திசையி லிருந்து வருந் தென்றல் என் காதலை அழகர்க்குக் கூறுமோ? மேகத்தைத் தூது விடலாமோ? அது மாதரை யெல்லாந் தூற்றுந்தன்மை யுடையது. காக்கைக்குக் கொடி என்பது பெயர். கொடியார் எனக் காக்கையாரைக் கூறலாம். பரங்கருணையார் ஆகிய அழகர்முன் காக்கையார்

போய்த் தூது கூறுவாரோ? கொடியார் என்ற பெயர் பெற்றவர் ஆதலால் போகார். நீதான் போய்த் தூது கூறுந் தகுதியுடையை. அழகர் பல அடியார்க ளுடன் இருந்தால் அவ்வடியார்கள் பாடுவதுபோல நீயுங் கீர்த்தனம் பாடுவாய். நாச்சியார் பக்கத்திருந்தால் அவர் கையிற் பறந்து சென்று தங்குவாய். 'எங்கிருந்து வந்தா' யென்று வினவினல் 'எந்தாய்! திருமாலிருஞ் சோலையி லிருந்து உன்னைத்தேடித் தொழுவதற்கு வந்தேன்' என்றுரைப்பாய். சவுந்தரவல்லிக்கும் சூடிக் கொடுத்தா ளுக்கும் தோன்ருத படியும் கடுகளவு சினமும் தோன்ருத படியும் என் காதலை வடுகிலே (சிதலுங்கிலே) சொல்வாய். என் கவலையையும் நீக்குவாய். அழகர் புனைந்திருக்கும் மணமாலையை வாங்கிக்கொண்டு வருவாய்; இத்துணைத் தகுதியுடைய பறவை ஒன்று எங்கேனும் உளதோ? இல்லை. "நீயே செல்" என்று கூறிப் பின் இடம் அமையம் எடுத்துரைக்கின்ருள்.

## இடம் அமையம் எடுத்துரைத்தல்

அழகர் இருக்கும் இடம் சோலைமலை. அத் தலத்தில் முதல் யுகத்தில் ஆலாகி, இரண்டில் அரசாகி, மூன்றிலே வில்வமாகி, நான்காகிய இக் கலியுகத்திற்கு புத்திரதீப மென்ற பெயர்பெற்ற மரமாகித் தேவர்கட்கு ஆருவது தருவாகி நிற்கும் ஒரு மரமுண்டு. அன்றியும், நெருங்கிய கோடிக்கணக்கான பூஞ்சோலைகளும் யாறுகளும் பூஞ் சுனைகளும் உள்ளன. யோகிகளைப் போல இரவும் பகலும் உறங்காப் புளியமரமும் ஒன்றுண்டு. மகன் தன் தந்தை யுடன் பேச வருவதுபோலப் பிரமன் வருவான். வந்து தந்தையாகிய அழகரைக் கண்டு பேசித் தங்கியிருப்பன். இந்திரன் தன் துணைவனுகிய உபேந்திரனில்லையே என்று கருதி வந்து வணங்கியிருப்பன். பரதன், சுக்கிரீவன், விபீடணன் என்ற தம்பியர்க்கு அரசு கொடுத்த இராமன் ஆகிய அழகர் அவர்களுடன் அங்கிருப்பர். சீரங்கராச பட்டர் என்ற அர்ச்சகரும், திருமாலிருஞ்சோலைச் சீயரும், திருமாலையாண்டானும், தோழப்பையங்கார் என்னும்

ஆச்சாரியரும் ஒவ்வொரு நாளும் பணியும் பட்டராகிய வேதபாரகரும், அமுதார் என்பவரும், திருமலைநம்பிகளும், சோலைமலை நம்பிகளும், சடகோப நம்பி என்பவரும், திருமாலிருஞ்சோலைப் பிரியர் என்பவரும் அம் மலையி லிருந்து ஆளும் திருமாலாகிய அத் தெய்வத்தினருளையே துணையாகக் கொண்டு எந்நாளும் வாழும் கோயிற் பணியாளர் பலரும் கூடிப் பாதத்தை வணங்கும்படி திருக் கோயிலில் எழுந்தருளியிருப்பர் அழகர்.

அப்போது நீ சென்று என் காதலைக் கூறுவையாயின் அம்மொழி செவியிலேறாது, பள்ளியறைக்கு எழுந்தருளும் அமையம் பார்த்து எழுந்து ஒருவரும் ஒன்றுஞ் சொல்லாத அமையமும் பார்த்து நீ சொல்லுக. மன்மதன் மலரம்பு தூற்ற வருவதற்கு முன்னும் அயலார் என்னை யலர் கூறித் தூற்றுவதற்கு முன்னும் குடமுனிவாயினடங்கி வெளி வந்த கடலின் ஒலியடங்கவும், தாய்மார் வாயின் அதட்டுஞ் சொற்கள் அடங்கவும் நீ தூது கூறுவாய். சுவாகதம் என்பது உன் பெயர். அதன்பொருள் நல்வரவு என்பது. ஆதலால், உன் வரவை நல்வரவாகக் கொள்வார் எல்லாரும். இராமனே உன்னைப் புகழ்ந்தான் என்றால் யார்தாம் உன்னைப் புகழாதிருப்பவர்? எல்லாரும் புகழ்ந்து பேசுவர். நீ முதலில் திருமாலை நோக்கி, 'உம்முடைய இருபுயத்து மாலையை யுதவும்' எனக் கேள். அதனை உதவாது மறுத்தனரெனில், நாச்சியார் சூடிக் கொடுத்த மாலையையாவது கேள்; அழகர் கருணையுடைய வர்; ஆடித்தியாகம் அளிப்பவர்; எவர்க்கும் இல்லை என்று சொல்லார். அதனால் அவர் புயத்து மணமாலையை வாங்கி வருவாயாக'' என்று கூறிமுடிக்கின்றாள்; தலைவி.

இந்நூற் செய்யுணடை, எதுகை மோனை யமைந்து, இனிமையும் எளிமையும் வாய்ந்து, ஒழுகிய ஓசையும் விழு மிய பொருளும் கெழுமியதாய்ப் படிக்கப்படிக்க இன்பந் தரும் பான்மையினமைந்து செல்கின்றது. தன்மை முதலிய பொருளணிகளும், மடக்கு முதலிய சொல்லணிகளும் பல விடங்களில் வந்துள்ளன. இராமாயணம், பாகவதம்,

கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் ஆகிய புராணங்களிற் கூறப்படுங் கதைகள் பல வரக் காண்கிறோம். பழமொழி, நாட்டுவழக்கம், மரபு உலகியல்பு இடையிடையே வருகின்றன. எனவே, இந் நூலாசிரியர், இலக்கணம் இலக்கிய முதலிய பல நூல்கள் கற்றுணர்ந்தவர் என்பதும், உலகியல் வழக்கு, செய்யுள் வழக்கு பயின்று கவிபாடும் ஆற்றலுடையவர் என்பதும் கூறுமலே நன்கு விளங்கும். வெளிப்பொருள் ஒன்று, உட்பொருள் ஒன்று அமையப் பாடுவதே இவர் இயற்கைபோலும். நூலுட் காண்க.

பொருத்தம்

ஆசிரியர் நூலின் தொடக்கத்திற் ''கார்கொண்ட'' என்ற சீர் எடுத்திருப்பது பாட்டுடைத்தலைவர் ஆகிய "அழகர்'' என்ற பெயருக்குப் பொருத்தம் பார்த்து வைத்ததாகத் தோன்றுகிறது. மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்ற பத்தும் பொருந்தியுள்ளன அச் சீரின்கண். பாட்டியல் கற்றவர் என்பதில் ஐயமுளதோ? ஆய்ந்தறிக.

பொருளணி

''துரி சற்றோர்,
இன்சொல்லைக் கற்பாரெவர்சொல்லும் நீ கற்பாய்
உன்சொல்லைக் கற்கவல்லா ருண்டோகாண்'' (16, 17)
''வாளனைய கண்ணார் வளர்க்கவளர் வாயுறவில்
லாளனை நீ கண்டா லகன்றிடுவாய்''

என்று கிளியின் இயற்கைப் பண்பினை எடுத்துரைக்குமிடங்கள் தன்மையணி யமைந்துள்ளது. அழகர் தெய்வப் பண்பினைச் செப்புமிடங்களிலும் அவ்வணி சேர்ந்துள்ளது.

''இந்திரன் போலு மிடபாசலம் அவன்மேல்
வந்தவிழி போலும் வளச்சுனைகள் — முந்துதிரு
மாலுடைய தோளின் மணிமார்பின் முத்தாரம்
போல வருநூ புரநதியான்'' (102, 103)

எனவும்,

"இயலுங் கரியுமதி லெற்று முரசம்
புயலு முருமேறும் போல" (155)

எனவும் உவமையணி அமைந்துள்ளன.

"உண்ணின் றுருக்கும்......
அத்து விதா னந்தமென்ற களி யானையினன்" (112–116)
"தானந் தவர்க்கத் நடனெழுத்து......வேதப்புரவியான்"
(116–119)

எனவும் அத்துவிதானந்தத்தை யானையாகவும், வேதத்தைப் புரவியாகவும் உருவகஞ் செய்திருப்பது காண்க.

"வன்போரில்,
மேவுஞ் சிவன்விழியால் வேள்கருகி நாண்கருகி
கூவும் பெரிய குயில்கருகிப்—பாவம்போல்
நின்று மறும்படுநாள் நீதா னடுப்படையிற்
சென்று மறுப்படா தேவந்தாய்" (39–41)

எனவும்,

"பார்க்கும் பொழுதிலுனைப் பார்ப்பதியென் பாரென்றோ
மூக்குச் சிவந்தாய் மொழிந்திடாய்" (3)
"கைச்சிலைவே ளால்வருந்துங் காமநோய் தீப்பதற்கோ
பச்சிலை ரூபம் படைத்திருந்தாய்" (49)

எனவும் கற்பனை வந்துள்ள இடங்கள் காண்க. இன்னும் பல இடங்களில் இவ்வணிகள் வந்துள்ள பகுதிகளும் பிற வணிகள் வந்துள்ள பகுதிகளும் ஆய்ந்து காண்க.

சொல்லணி

"குருகூரத் தானேசங் கூர்கமுகி லேறும்
குருகூரத் தானேசங் கூர்" (காப்பு)
"பாத கமலம் பரவுமலை யத்துவசன்" (141)
பாத கமலம் பறித்திடுவோன்"
"திருப்பாது கைக்கும் செழுங்கருடனுக்கும்
திருப்பாது கைக்குமர சீந்தோன்........." (137)

எனவும்,

"பார மூதுகடைந்த பாயலான் விண்ணவர்க்கா
ஆரமுது கடைந்த வங்கையான் — நாரியுடன்
வன்கான கங்கடந்த வாட்டத்தான் வேட்டுவற்கு
மென்கான கங்கடந்த விட்டினன்" (73, 74)

"அரணும் புயங்க ளூறுமம்ப ரிடத்தும்
சரணும் புயங்க டருவோன்" (138)

எனவும் யமகம், திரிபு என்ற சொல்லணிகள் வந்துள்ளன.

"தம்பியர் மூவருக்கும் தானே யரசீந்த, நம்பி" (216) எனவும், "கும்பமுனி வாயி னுரையடங்க வந்த கடல்" (132, 133) எனவும், "அரவணையானென்பது முண்டன்ன லரன்போல இரவணையானென்பது முண்டு" (170) எனவும், "மேவுஞ் சிவன் விழியால் வேள்கருகி நாண் கருகி" (40) எனவும் புராணக்கதைகள் புகுந்திருக்கும் இடங்களை நோக்குக.

பால் குடிக்கும் பச்சைக் குழந்தை (48) கிளிப்பிள்ளை சொன்னத்தைச் சொல்லும் (46, 47), அவனசையாமல் அணுவசையாது (1-3), இபமுண்ட வெள்ளிற்கனி (187, 188) (யானையுண்ட விளங்கனி) யானேன் எனப் பழமொழிகள் சில பார்க்கின்றோம். நம்மாழ்வார் காப்பு முன் அமைத்திருப்பதும், கருடனைப் பெரிய திருவடிகள் (23) என்றும், அழகர் வாகனம் ஆகிய குதிரையைக் "குதிரை நம்பிரான்" (152) என்றும், பள்ளியறையைச் "சேர்த்தி" (230) என்றும் இவர் செய்யுளில் அமைத்துப் பாடியதும் வைணவ மத மரபு குறித்தவையே. புதுமனை புகுவோரும், பகைவர் நாட்டை வென்று தமக்குரியதாக்கிப் புதிதாக அந் நாட்டில் நகரிற் புகுவோரும், அவற்றைப் புதுக்கி மாவிலை தோரணங்கட்டி, வாழை கமுகு நாட்டிப் புகுவது தமிழ்நாட்டு வழக்கமாகும். அது குறித்து, 'விடணன் போய்த் தொல்லிலங்கை கட்டு புதுத் தோரணமோ?" என்று நாட்டு வழக்கத்தை நாட்டினர். ஒருவர்பால் ஒருவரைத் தூதுவிடுப்போர், தூது சொல்லும் ஆற்றல் உடையவரென வறிந்து அவரைப் பெரிதும் புகழ்ந்து வேண்டும் உதவி புரிகின்றேன் என்று மனமகிழ்

வுண்டாக்கிப் பின் தூதுவிடுத்தல் உலகியல்பு. அவ் வியல்பினையறிந்தே ஆசிரியர் "கிளியரசே!" என விளித்துப் பலவாறு புகழ்ந்து "ஊட்டுவேன், நலம் காட்டுவேன்" என்று பலபடப் பாராட்டித் தலைவி தூது விடுப்பதாகப் பொருளமைத்துள்ளார்; உலகியலுணர்வை இந்நூலுட் பலவிடங்களில் உய்த்துணர்க. இரு பொருள் படச் சொற்றொடர் அமைப்பதே இக் கவிஞர்க்கியற்கை என்பதை இந்நூல் காட்டும். "சீர்கொண்ட வையம் படைக்கு மதனையு மேற்கொண்டு" என்ற தொடரில், சிறப்பாகிய பூமியைப் படைக்கும் அத் தொழிலையும் தனக் குரியதாகக்கொண்டு என்பது வெளிப்பொருள். சிறப்பாகிய ஐந்து அம்புகளை யடைத்து வைத்திருக்கும் மன்மதனையும் தன் மேல் ஏற்றிக்கொண்டு என்பது உரிய பொருள். இவ்வாறு வந்துள்ள இடங்கள் பல. ஆதலால் அவற்றை உரை விளக்கம் பார்த்துக் கண்டுகளித்துச் சொற்சுவை பொருட்சுவை நுய்த்து இன்புறுக.

இந்நூலின்கண் சிறப்பிக்கப்பெற்றுள்ள அழகர்மலை பண்டு திருமுருகன் திருக்கோயிலாகத் திகழ்ந்தமைக்கு வேறு பல வலிய சான்றுகளும் கிடைத்துள்ளன. அவை இன்ஞான்று 'திரு அழகர் கோயில்' வெளியிட்டாகிய வரலாற்று நூலாலும் வலியுறுத்தப்படுகின்றன.

சென்னைக் கல்வெட்டு ஆராய்ச்சித் துறையில் பணி யாற்றியுள்ள அறிஞர் திரு. வி. வேங்கடசுப்பு ஐயர் என்பவர் 'அழகர்மலையும் கல்வெட்டுக்களும்' என்ற தம் நூலில் பின் வருமாறு கூறுகின்றனர்:

"இப்போது பதினெட்டாம்படிக் கறுப்பன் இருக்கும் இடத்தில் 'முருகன் கோயில்' இருந்திருத்தல் வேண்டும். 'வேலும் சேவலும்' இன்றைக்கும் இங்கே காணிக்கையாகக் குவிகின்றன. வேல்கள் இங்கே நடப்பெற்றுள்ளன. பழைய கல்வெட்டுகள் இங்குள்ள ஆண்டவன் 'பரமசாமி' என்றே குறிக்கின்றன. யானைமுகக் கடவுள் கோயிலும் சேத்திரபாலகர் கோயிலும் இன்னும் பெருமாள் திரு முன்னர் மாமண்டபத்திலிருக்கின்றன. அங்கே திருநீறும்

வழங்கப்படுகின்றது. ஆதலால், இஃது ஒரு காலத்தில் சைவத் திருக்கோயிலாகவே இருந்திருத்தல் வேண்டும். இந்தத் தலத்தில்ஒரே பீடத்தில் மூலஉருவமும், அதற்கு இருபுறத்திலும் இருதேவிமாரின் திருவுருவங்களும் நின்ற திருக்கோலமாக எழுந்தருளியிருப்பது போல் வேறு எந்தத் திருமால் கோயிலிலும் காணப்படவில்லை. திருமுருகனுடைய படைத்தலைவராகிய 'வீரவாகு தேவரே' இம் மலையைக் காத்து வருகின்றனர். இக் கோயிலின் முகப்பில் உள்ள 'கருப்பண்ணசாமி' கோயிலுக்கும் எந்தக் காலத்திலும் எவ்வகைத் தொடர்புங் கிடையாது. இந்தக் கோயிலின் விமானம் 'சோமசுந்தர விமானம்' என்றும், மலையின் பெயா 'இடபகிரி' என்றும் சொல்லப் பெறுகின்றன. மலைநாட்டுத் தெய்வம் முருகனே; ஆதலால் இது திருமுருகன் தலமே என்பது நிலைபெறுகின்றது. சித்திரைப் பெருவிழாவில் 'திரு அழகர்' மதுரைத் திருநகருக்கு எழுந்தருளி வரும்போது வழியிலெல்லாம் செய்யப்படும் வழிபாடுகள் அனைத்தும் நக்கீர தேவரால் திருமுருகாற்றுப்படையில் கூறப்பெற்றுள்ள வழிபாடுகளுக்கு எடுத்துக்காட்டாகவே இருக்கின்றன.

'திரு அழகர்' என்ற பெயர் திருமுருகனுக்கு மறுபெயரே. திருமால் என்ற சொற்பொருளோடு இது பொருந்தாது. கள்ளர் என்னும் மலைநாட்டு மக்களுக்கு உரியவர் 'கள்ளழகப்பெருமான்'' என்பதே.

———

# ஆசிரியர் வரலாறு

"அழகர் கிள்ளைவிடு தூது" என்னும் இந்நூலினாசிரியர் பெயர் பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை என்பது. பிள்ளை என்பதை விடுத்துப் புலவர் எனவும், கவிராயர் எனவும் அடுத்து வைத்து வழங்கியிருப்பதாகவும் அறிகிறோம். இவர் பாண்டிநாட்டிற் சிறப்பு வாய்ந்த தென்மதுரையில் வாழ்ந்தவர் எனவும், இவருடைய தந்தையார் பெயர் சொக்கலிங்கம் பிள்ளை எனவும் தெரிகிறது, பலபட்டடைக் கணக்கு என்பது ஒருவகை உத்தியோகம். அத் தொழிலைக் கைக்கொண்டு வாழ்ந்தவர்கள் இவருடைய முன்னோர்கள். ஆதலால் இப் பெயர் முன் அடைமொழியாக நிற்கிறது. சொக்கநாதர் என்பதுதான் இயற்பெயர் எனக் காண்க.

இவருடைய தாய்தந்தையர் மதுரைச் சொக்கநாதரை வழிபட்டு இவரைப் பயந்த காரணத்தால் சொக்கநாதர் எனப் பெயரிட்டனர் போலும். அங்கயற்கண்ணம்மையையும் சொக்கநாதரையும் இவர் பல பாடல் பாடித் துதித்து வழிபட்டனரென்பது வரலாறு கண்ட உண்மை. அதற்குச் சான்றாகத் தனிப்பாடற்றிரட்டில் பல கவிகளுள் ளன. இவர் பாடல்கள் யாவும் எளிமையும் இனிமையும் வாய்ந்தவை. உட்பொருளும் வெளிப்பொருளும் அமைத்தே பாடுவது இவர் இயற்கை போலும். வசை போலத் தோன்றி இசை விளைவிக்கும் செய்யுட்களும் இவர் இயற்றியிருக்கின்றார். செங்குன்றையூரன் என்ற ஒரு வள்ளலை ஒரு காலத்தில் சென்று கண்டார். அவ் வள்ளல் புலவர் பலருக்குப் பரிசில் வழங்கித் தமிழ்க் கவிகள் கேட்டு இன்பமுற்று வாழ்ந்தனன். ஒவ்வொரு நாளும் புலவர் பலர் வந்து காண்பதும் பரிசில் பெற்றுச் செல்வதும் வழக்கமாக இருந்தது. செங்குன்றையூரன் வேற்றூர்க்குச் சென்றாலும் அங்கும் புலவர்குழுச் செல்லும். இதனைக் கண்டு வியந்த கவிஞர் உவமையமைத்து ஒரு கவி பாடினர்.

"ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலும்
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—கோலஞ்சேர்
செங்கே தகைமணக்குஞ் செங்குன்றை யூரனெங்கே
அங்கே யிரவலரெல் லாம்"

என்பது அப் பாடல். பழுமரம் எங்கேயிருந்தாலும் பறவைகள் அங்குச் செல்லும்; ஆலிலையி லறிதுயில் கொள்ளும் திருமால் இருக்குமிடத்தில் திருமகளிருப்பாள்; அழகுடைய நல்ல தாழைமலர் மணம் வீசும்; செங்குன்றைநகர் வள்ளல் இருக்குமிடத்தில் இரவலர் யாவரும் வந்திருப்பர் என்பது அதன் பொருள். இஃது எவ்வளவு எளிய இனிய நடையாகத் தோன்றுகிறது! இக்கவியில் எங்கே யங்கே என்ற சொற்கள் எவ்வளவு இனிமை பயக்கின்றன! சொற் பொருட் பின்வருநிலை யணியமைந்தது இது. இன்னும் இவர் வாழ்நாளில் பணப்பற்றுள்ளமுடையவரைக் (உலோபியர்) கண்டார்! "இவர் ஏன் உலகத்தில் பிறந்து வளர்ந்து வாழ்கிறார்? இவரை என்ன பயன் கருதிக்கடவுள் படைத்தார்?" என்று ஆராய்ந்தார். அப்போது தம் கையைப் பார்த்தார். ஐந்து விரல்களையும் ஆய்ந்தார். நடு விரல் பயன்படாமல் பெரிதாக வளர்ந்து நிற்கிறதே ஏன்? இவ் விரலைப் படைத்தவரும் கடவுள்தாமே! ஏன் படைத்தார் என நமக்கே தோன்றவில்லையே! நம் வழிபடுங் கடவுளாகிய முருகனிடமே இதனைக் கூறி முறையிடுவோம்" என்று நினைந்து முறையிட்டார். அக் கவி இது:

"சுண்ணாம்பு நீட்டஙல் வாள்காட்ட மோதிரஞ் சுட்டமவர்க்
கண்ணாரைக் கூட்ட விரலுள் கிருக்கக் கதிர்க்கம்பி போல்
என்னா கடுவிரற் கேதா மூலோபருக் கேதகண்டாய்
கண்ணார் நுதலண்ணல் செய்வண்கா செந்தில் காத்தவனே."

இதில் விரலுக்கும் செய்யுஞ் சிறந்த தொழில் விளக்கப்பட்டிருப்பது காண்க. பெருவிரல் வெற்றிலையிற் சுண்ணாம்பு தடவுவது; அடுத்த விரல் ஆளைச்சுட்டிக் காட்டுவது. நான்காவது விரல் மோதிரம் அணியப்படுவது; சுண்டுவிரல் திருமணத்தில் காதலி கைப்பற்றுவது. இதனை

யாய்ந்தபோது நடுவில் பயனின்றி நிற்கிறது எனக் காண்கிறோம். யாவருக்கும் விளங்கும் உவமையைப் பொருத்திய இவ்வாசிரியர் கவியருமை வியக்கத்தக்க தன்றோ? இன்னும் ஒரு கவியும் காட்டுவோம்.

சிவந்தான் மல்லிப் பல்லவன் என்றொரு வள்ளல் இவருக்கு ஆருயிர் நண்பராகவும் அருமைத் தமிழ்மக்கட் பண்பராகவும் அமைந்திருந்தார். அவரைப் புகழ்ந்து பல பாடல்கள் பாடிப் பரிசு பெற்று வாழ்ந்திருந்தனர் போலும். அப்பரிசுகளில் ஒன்று இரட்டைக் கடுக்கன். 'இரட்டைக் கடுக்கன்' என்பது காதிலணியுங் கடுக்கன் என்ற அணியில் மிகவும் நீண்டுள்ளது. தோள்வரை தொங்கி யாடிக்கொண்டிருப்பது. அப் பணியைக் காதிற் பூண்டு பலரையும் சென்று கண்டு பாடிப் பரிசு பெற்று வாழ்ந்து வந்தார். மல்லிப் பல்லவனைப் போலப் பரிசில் வழங்கு வோரைக் கண்டறியாது வருந்தி மெலிந்தார். ஈயாத பற்றுள்ள முடையவரிடம் சென்று கைநீட்டித் தலையைக் குலுக்கி யசைத்து அவரை மனமகிழச் செய்யப் பாடு பட்டார். பரிசில் கிடைத்திலது. அவர் பூண்டிருந்த இரட்டைக்கடுக்கன் தலையைக் குலுக்கிப் பாடும்போதும் பேசும்போதும் கன்னத்திலடிப்பதையும் கண்டார். சிவந் தான் மல்லிப்பல்லவன் செயலை வியந்தார். இவ்விரட்டைக் கடுக்கன்களை எவ்வாறு பூட்டியிருக்கின்றான். காடு, மலை, செடி கடந்து போய்க் கண்டவர்களை யெல்லாம் பாடிக் காலங் கழிக்காதே என்று கன்னத்திலடித்தும் புத்தி புகட்டுகின்றனவே இவை! அவனையே பாடி அசை யாமல் அருகில் இருப்பது நலமல்லவா? பேராசையால் அலைவது பேதைமை என்பதை யுணர்ந்தார். அவ் வுணர்ச்சியால்,

"பாடுந் தமிழ்க்குச் சிவந்தெழுந் தான்மல்லிப் பல்லவர்கோன்
காடுஞ் செடியுந் திரியா திரட்டைக் கடுக்கன் செய்து
போடும் பொழுதென்ன பூட்டகமோ வற்பப் புல்லரைக்கொண்
டாடும் பொழுதிரு கன்னத்தி லேயின் றடிக்கின்றதே"

என்று பாடினார். இச் செய்யுளின் நயத்தைக் கூர்ந்து நோக் குங்கள். அற்பப் புல்லரைக் கொண்டாடும்பொழுது அத்

கடுக்கன்கள் 'பாடாதே பாடாதே!' என்று கன்னத்தி லடிக்கின்றன. இவ்வாறு அடிக்கும்படி அமைத்திருக் கின்ருன், இஃது என்ன பூட்டகமோ? பொருத்தியிருக்கும் இடம் என்ன அழகாக அமைந்திருக்கிறது! நமக்கு அறிவு புகட்டுவதற்காகவே செய்த செயல்போலும் இஃது என்று வியப்பது போலத் தோன்றுகிறது. இத்தகைய அருமைக் கவிகள் பல புனைந்து வாழ்ந்தனர் என நாம் அறிகின்ருேம். தனிப்பாடற்றிரட்டில் இவர் செய்யுட்கள் பல வந்துள்ளன. அவர் திருநெல்வேலி சென்றபோது காந்திமதியம்மையைக் கண்டு 'தம் கவலையைச் சிவ பெருமானுக்குக் கூறு' மாறு பாடித் துதித்தனர் எனத் தெரிகிறது.

''ஆய்முத்தப் பந்தரின் மெல்லணை மீதன் னருகிருந்து
நீ முத்தந் தாவென் றவர்கொஞ்சும் வேளையி லித்தனித்தம்
வேய்முத்த ரோடென் குறைகளெல் லாமெல்ல மெல்லச்
[சொன்னல்
வாய்முத்தஞ் சிந்தி விடுமோநெல் வேலி வடிவன்னையே.''

இஃது அப் பாடல்.

வேய்முத்தர் - மூங்கிலில் தோன்றியவர் (சிவபெரு மான்). அத் தலத்தில் மூங்கிலின் முளைத்ததாகத் தல புராணங் கூறுகிறது. வடிவன்னை, வடிவம்மை என்பன உமையின் பெயர். யாவர்க்கும் விளங்குமாறு உலகியல் புணர்த்தித் தாயை வணங்கிய தகைமையாயமைந்த சொற்சுவை பொருட்சுவை பாராட்டற்பாலன. இவர் பாடிய கவிகள் யாவும் எவர்க்கும் இன்பம் ஊட்டுவனவே. சொக்கநாதர் அங்கயற்கண்ணியைத் துதித்துப் பாடிய பாடல்களே மிகுதியும் காணப்படுகின்றன. அதனால் இவர் சொக்க நாதர் என்ற பெயருக்கேற்பச் சிவபத்தியிற் சிறந் தவர் என்று தெரிகிறது. இவர் மும்மணிக்கோவை ஒன்றும், யமகவந்தாதி ஒன்றும் மதுரைப் பதியைக் குறித்துப் பாடினர் எனத் தெரிகிறது. இராமேச்சுரத்தின்மேல் தேவையுலா என்ற நூலும், திண்டுக்கல்லிற் கோயில்

கொண்டுள்ள பத்மகிரிநாதர்மீது தென்றல் விடுதூது என்ற நூலும், கன்னிவாடிச் சிற்றரசர் நரசிங்கநாயகர்மீது வளமடல் என்ற நூலும் இவர் பாடியிருப்பனவாகத் தெரிகின்றன.

பண்டைக்காலத்துப் புலவர் பரிசில் பெறும் வழக்கம் உண்மையால் ஒருவர் பெறுவதை மற்றொருவர் கண்டு அழுக்காறு கொள்வது இயல்பு. வேசையர் பொருள்மேல் ஆசையர் ஆதலால், அவர்களும் அழுக்காறு கொள்வர். நாய்களும் ஒன்று மற்றொன்றைக் கண்டால் அழுக்காறு கொண்டு குரைப்பது இயல்பு. அழுக்காறு என்ற பண்புடைய குலம் மேற்குறித்த மூன்றுகும். புலவர் மற்றொரு புலவரைப் போற்றுவதும், பரத்தையர் பிற பரத்தையரைப் புகழ்வதும், நாய் பிற நாயைக் கண்டு வாலையாட்டி மகிழ்வதும் அருமையாக நிகழுஞ் செயல்கள். இங்ஙனம் உலகியற்கையிருப்ப, ஆசிரியர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் களந்தைப் படிக்காசுத் தம்பிரான் தமிழ்ப்பாடல்களை வியந்து மனமகிழ்ந்து பாராட்டிய பண்பு யாவரும் வியக்கற்பாலதே. அப் பாடலை அடியிற் காண்க:

“மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்தமிழ்
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலும் மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைம்மணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்குந்
துய்ய சேற்றில்
நட்டாலுந் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினறு
நளினந் தானே.”

“இஃது ஒருவர் வேண்டுகோட்கிணங்கியோ, அன்றிக் கைம்மாறு கருதியோ பாடியதன்று. தம் மனத்தெழுந்த வேட்கையாற் புகழ்ந்ததாதலின், இப் புலவர் தூய உள்ளம் உடையவர் என்பது சொல்லாமலே விளங்கும்.

இவர், சைவமதப் பற்றுடையவர் என்பதற்கு இவர் பெயரும் பாடிய செய்யுட்களும் சான்றுகத் தோன்று

கின்றன. தனிப்பாடற்றிரட்டில் வந்துள்ள கவிகள் யாவும் சிவபெருமானையும் உமையையும் குறித்தவையாகவே காணப்படுகின்றன. இந்நூல் மட்டும் வைணவ சமயத்தைக் குறித்ததென அறிகின்றோம். இந்நூலை இவர் இயற்றியதற்குக் காரணம் ஏதேனும் இருத்தல் வேண்டும். அது நமக்கு விளங்கவில்லை. சைவ சமயத்தினர் ஆகிய இவர் அழகரைப் போற்றியிருக்கும் முறையை யாய்ந்தால் சமய வேறுபாடமையாத உள்ளத்தவர் எனவே சாற்றத்தகும். இவர் இயற்றிய மதுரை மும்மணிக் கோவையில் 16, 20 ஆகிய எண்ணமைந்த பாடல் இரண்டும் "மேகவிடு தூது", "பூவைவிடு தூது" என்ற பொருளமைந்தனவா யிருப்பதாலும் "அழகர் கிள்ளைவிடு தூது" என்ற இந்நூலும், "தென்றல்விடு தூது" என்ற நூலும் இவர் இயற்றியிருப்பதாலும் தூதுப் பொருளமைந்த பாடல் பாடுவதிற் பெரிதும் ஆர்வமுடையவர் இவர் எனக் கோடல் பொருத்தமாகும்.

நாகம கூளப்ப நாயகன் காதல் பாடிய சுப்பிரதீபக் கவிராயருக்கும் இவருக்கும் மனவேறுபாடு தோன்றிய தால் ஒருவரையொருவர் குறைவாகப் பாடிய செய்யுள் சில உண்டென்று கூறுவர். சுப்பிரதீபக் கவிராயர், வீரமாமுனிவருக்குத் தமிழ் கற்பித்தவர் என்று வரலாறு கூறுவதால் அவ் வீரமாமுனிவர் காலமே இவர் காலமெனக் சொல்லலாம். வீரமாமுனிவர் காலம் கி. பி. 1680—1746.

———

திருச்சிற்றம்பலம்

திருமாலிருஞ் சோலைமலை

# அழகர் கிள்ளைவிடு தூது

## காப்பு

### வெண்பா

தென்னு தமிழ் அழகர் சீபதிவாழ் வார்மீது
கிள்ளைவிடு தூது கிளத்தவே—பிள்ளைக்
குருகூரத் தானேசங் கூர்கமுகி லேறும்
குருகூரத் தானேசங் கூர்.

## நூல்

### கிளியை விளித்தல்

1 கார்கொண்ட மேனிக் கடவுள் பெயர்கொண்டு
நீர்கொண்ட பாயல் நிறங்கொண்டு—சீர்கொண்ட
வையம் படைக்கு மதனையுமேற் கொண்டின்பம்
செய்யுங் கிளியரசே செப்பக்கேள்—வையமெலாம்
வேளாண்மை வென்னும் விளைவுக்கு நின்வார்த்தை
கேளா தவர்ஆர்காண் கிள்ளையே—நாளும்
மலைத்திடு மாரிநூற்றை வண்டினும்இல் லாமற்
செலுத்தியகாற் றேரைமுழுத் தேராய்ப்—

[பெலத்திமுத்துக்

கொண்டுதிரி பச்சைக் குதிராய் உனக்கெதிரோ
பண்டுதிரி வெய்யோன் பரிவேழும்—கண்ட
செகமுழுதும் நீஞான தீபமும் நீயென்று
சுகமுனியே சொல்லாரோ சொல்லாய்-வகைவகையாய்
எவ்வண்ண மாய்ப்பறக்கும் எப்பறவை யாயினும் உன்
ஐவண்ணத் துள்ளே யடங்குமே—மெய்வண்ணம்
பார்க்கும் பொழுதிலுனைப் பார்ப்பதியென் பாரென்றே
மூக்குச் சிவந்தாய் மொழிந்திடாய்—நாக்குத்
தடுமாறு வோரையெல்லாந் தள்ளுவரே யுன்னை
விடுவார் ஒருவருண்டோ விள்ளாய்—அடுபோர்
மறந்தரு சீவகனார் மங்கையரில் தத்தை
சிறந்ததுநின் பேர்படைத்த சீரே—பிறந்தவர்
ஆரும் பறவைகளுக் கச்சுதன்பே ருஞ்சிவன்றன்
பேரும் பகர்ந்தாற் பிழையன்றே—நேர்பெறுவி
வேகி யொருகூடு விட்டுமறு கூட்டையும்
யோகி புகக்குவமை யுண்டோகாண்—நீகீரம்
ஆகையா லாடை யுனக்குண்டே பாடகமும்
நீகொள்வாய் காலாழி நீங்காயே—ஏகாத
கற்புடையாய் நீயென்றுங் காமனையுஞ் சேர்வாயே
அற்புடைய பெண்கொடிநீ ஆகாயோ—பொற்புடையோர்
துன்னியசா யுச்யஞ் சுகருபம் ஆகையால்
அன்னது நின்சொருபம் அல்லவோ—வன்னி
பரிசித்த வெல்லாம் பரிசுத்தம் என்றே
உருசித்த உன்னெச்சில் உண்பார்—துரிசற்றோர்
இன்சொல்லைக் கற்பா ரெவர்சொல்லும் நீகற்பாய்
உன்சொல்லைக் கற்கவல்லார் உண்டோகாண்-மின்போலத்
தன்னரிய யோகங்கள் சாதியா தேபச்சைப்
பிள்ளையாய் வாழும் பெரியோரார்—உள்ளுணர்ந்த
மாலினைப் போல மகிதலத்தோர் வாட்டமறப்
பாலனத் தாலே பசிதீர்ப்பாய்—மேலினத்தோர்

20 நட்டா ரெனினும் நடந்துவரும் பூசைதனை
விட்டார் முகத்தில் விழித்திடாய்—வெட்டும் இரு
வாளனைய கண்ணார் வளர்க்கவளர் வாயுறவில்
லாளனை நீ கண்டால் அகன்றிடுவாய்—கேளாய்
இருவடிவு கொண்டமையால் எங்கள் பெரிய
திருவடிகள் வீறெல்லாஞ் சேர்வாய்—குலவாய்ச்
செபதே சிகர்க்கெல்லாந் தென்னரங்கர் நாமம்
உபதேச மாக உரைப்பாய் — இபமுலையார்
சித்தங் களிகூரச் செவ்விதழில் ஆடவர்போல்
முத்தங் கொடுக்க முகங்கோணாய்—தித்தமவர்
25 செவ்விதழுன் மூக்காற் சிவந்ததோ உன்மூக்கில்
அவ்வித ழின்சிவப்புண் டானதோ—செவ்வியிழந்
தண்டருக்குந் தோற்ற அடல்வேளா னுனை நீ
கொண்டிமுத்தால் ஆகுங் குறையுண்டோ — உண்டாக்கி
ஆயுவை நீட்ட அருந்தவத்தோர் பூரகஞ்செய்
வாயுவையுன் பின்னே வரவழைப்பாய்—தேயசொளிர்
மைப்பிடிக்கும் வேற்கண் மலர்மாதுஞ் சங்கரியும்
கைப்பிடிக்க நீவங் கணம்பிடித்தாய்—மெய்ப்பிடிக்கும்
பச்சைநிறம் அச்சுதற்கும் பார்ப்பதிக்கு முன்றனக்கும்
இச்சைபெற வந்தவிதம் எந்தவிதம்—மெச்சும்
30 குருகேயுன் னுக்குத்தான் கூழைநாக் கான
தரிசேர்த் தனத்தினால் அன்றோ—தெரிவையர்கள்
ஆர்த்தவிரல் உன்முகமொப் பாகையா லேகையைப்
பார்த்து முகமதனைப் பாரென்பார்—சீர்த்திக்
கிரியையிலே காணுங்காற் கிள்ளை அடையாத
பெரியதனம் வீணன்றோ பேசாய்—தெரியுங்கால்
தேறுகனி காவேரி சிந்துகோ தாவிரியும்
வீறுபெறு மேநீ விரும்பினாற்—கூறில்அனம்
உன்னுடைய வூணன்றோ ஊதப் பறந்துபோம்
சின்னவடி வன்றோ செழுங்குவிலும்—என்னே

முதுவண் டினந்தான் முடிச்சவிழ்த் தாலும்
மதுவுண்டாற் பின்னைவா யுண்டோ—எதிரும்
கரும்புரு வார்த்தை கசப்பென்று சொல்ல
வரும்புரு வுக்குமொரு வாயோ—விரும்புமயில்
உற்ற பிணிமுகமே உன்போற் சுகரூபம்
பெற்ற பறவை பிறவுண்டோ—கற்றறியும்
கல்வியுங் கேள்வியுங்கைக் கொண்டாய் சாரிகைக்குள்
செல்வமதி லன்னித் தெளித்தாயோ—சொல் வேத
மென்பரிநா லுக்கும் வீதிசா ரதிவில்வேள்
தன்பரி யேயுனக்குச் சாரதியார்—வன்போரில்
மேவுஞ் சிவன்விழியால் வேள்கருகி நாண்கருகிக்
கூவும் பெரிய குயில்கருகிப்—பாவம்போல்
நின்று மறுப்படுநாள் நீதா னடுப்படையிற்
சென்று மறுப்படா தேவந்தாய்—என்றுமாக்
காய்க்குங் கனியல்லாற் காய்பூ லிவன்றனுக்கு
மூக்கு மறுப்பாய் முகம்பாராய்—ஆக்கம்
வரையாமல் நன்மை வரத்தினை நல்கும்
அரிதானை நீவிட் டகலாய்—இருகை
உனக்கில்லை யுன்சிறகி ரண்டுமெனக் கில்லை
எனக்கும் உனக் கும்பேதம் ஈதே—மனைக்குள்
இதமாய் மனிதருட னேபழகு வாயன்
பேதனுன் முறைவிட் டழைப்பாய்—மதுவுண்
அளிப்பிள்ளை வாய்குழறு மாம்பரத்தி லேறிக்
களிப்பிள்ளைப் பூங்குயிலும் கத்தும்—கிளிப்பிள்ளை
சொன்னத்தைச் சொல்லுமென்று சொல்லப் பெயர்
[கொண்டாய்
பின்னத்தைப் போதுமொரு பேறுண்டோ-அன்னமின்றிப்
பால்குடிக்கும் பச்சைக் குழந்தைநீ யானாலும்
கால்பிடிப்பார் கோடிபேர் கண்டாயே-மால்பிடித்தோர்
கைச்சிலைவே ளால்வருந்துங் காமநோய் தீர்ப்பதற்கோ

பச்சிலை ரூபம் படைத்திருந்தாய் — அச்ச
மணப்பேதை யார்மால் வளஞ்சுடவோ வன்னி
எனப்பேர் படைத்தாய் இயம்பாய் — அனத்தை
நிலவோவென் பார்கள் நெடுந்துயர்வே ழத்தைக்
கொலவோ வரிவடிவங் கொண்டாய் — சிலைநுதலார்
கொன்னை விரகக் கொடும்படையை வெல்லவோ
கின்னை வடிவெடுத்தாய் கிற்பாய்நீ — உள்ளம்
மிகவுடைய மாதர் விதனங் கெடவோ
சுகவடிவு நீ கொண்டாய் சொல்லாய் — தகவுடைய
தத்தை யடைந்தவரே தத்தையடை யாரென்னும்
வித்தையடைந் தாயுனையார் மெச்சவல்லார் - முத்தமி
மாரதி பாரதியார்க் குன்னையுவ மானிப்பார் [ழோர்
ஆரதிகம் ஆர்தாழ் வறைந்திடாய் — ஊரறிய
நெய்யிற்கை இட்டாலு நீதான் பசுமையென்றே
கையிட்டுச் சுத்தி கரிக்கலாம் — மெய்யின்
வடிவும் வளைந்த மணிமூக்கு மாயன்
கொடியி லிருப்பவர்தங் கூறே — நெடியமால்
விண்டுதறித் தூது வேணுகா னத்தினிலே
பண்டு தழைத்த பசுந்தழையோ — கொண்டசிற
கல்லிலங்கு மெய்யானை அன்றழித்து வீடணன்போய்த்
தொல்லிலங்கைக் கட்டுபுதுத் தோரணமோ — நல்வாய்
மழலை மொழிதான் மணிவண்ணன் செங்கைக்
குழலின் இசைதானோ கூறாய் — அழகுக்
கிளிப்பிள்ளாய் தெள்ளமுதக் கிள்ளாய் நலங்குக்
குளிப்பிள்ளாய் இன்பரசக் குஞ்சே — வளிப்பிள்ளை
தன்னைத்தாய் போலெடுத்துச் சஞ்சரிக்குஞ் சம்பத்தாய்
பின்னைத்தாய் கையிலுறை பெண்டத்தாய் — பொன்
[னைத்தாய்
மூத்திசைகே ரேழிலொன்றே முத்தமிழ்வல் லாரிலொன்றாம்
ஒத்ததனித் தவ்விப்பே ருற்றதொன்றே — சுத்தமுறும்

ஐந்தபூ தத்திலொன்றே யானபடை நான்கிலொன்றே
மூந்தமுதலானபொருள் மூன்றி லொன்றே—வந்த
இருபயனி லொன்றே இமையே விழியே
பருவ விழியிலுறை பாவாய்—ஒருநாளில்
ஏற்றுந் திருமாலை யெய்தப் போய் ஊரெல்லாம்
தூற்றுமலர் கொண்டகதை சொல்லக்கேள்-தோற்றி

## அழகர் மாண்பு

அரிவடிவு மாய்ப்பின் னரன்வடிவு மாகிப்
பெரியதொரு தூணிற் பிறந்து—கரிய
வரைத்தடந் தோள் அவுணன் வன்காயங் கூட்டி
அரைத்திடுஞ் சேனை அருந்தி—உருத்திரனும்
பண்ணுந் தொழிலைப் பகைத்துநிலக் காப்புமணிந்
துண்ணும் படியெல்லாம் உண்டருளி-வெண்ணெயுடன்
பூதனை தந்தபால் போதாம லேபசித்து
வேதனையும் பெற்று வெளிநின்று—பாதலத்தைத்
தன்னுநடை விட்டுத் தவழ்ந்து விளையாடும்
பிள்ளைமை நீங்காத பெற்றியான்—ஒள்ளிழையார்
கொல்லைப்பெண் ணைக்குதிரை யாக்குந் திருப்புயத்தான்
கல்லைப்பெண் ணாக்குமலர்க் காலினான்—சொல்கவிக்குப்
பார முதுகடைந்த பாயலான் விண்ணவர்க்கா
ஆர முதுகடைந்த அங்கையான்—நாரியுடன்
வன்கானகங் கடந்த வாட்டத்தான் வேட்டுவற்கு
மென்கா னகங்கடந்த வீட்டினான்—என்காதல்
வெள்ளத் தமிழ்ந்தினேன் வேலைக்கு மேல்மிதந்தோன்
உள்ளத்த னாலுலகுக் குப்பாலான் —தெள்ளிநின்
வெட்ட வெறுவெளியி லேநின்றுந் தோற்றாதான்
கிட்ட விருந்துங் கிடையாதான் —தட்டாதென்
எண்ணிலே மாய னெனும்பேரி ருலொலிப்போன்

கண்ண னெனும்பெயராற் காண்பிப்போன்—
[என்னுங்கால்
எங்கு மிலாதிருந்தே எங்கு நிறைந்திருப்போன்
எங்கு நிறைந்திருந்தே எங்குமிலான்—அங்கறியும்
என்னை எனக்கொளித்தி யானென்றுங் காணாத
தன்னை யெனக்கருளுந் தம்பிரான்—முன்னைவினை
கொன்று மலமாயைக் கூட்டங் குலைத்தென்னை
என்றுந் தனியே இருத்துவோன்—துன்றுபிர
மாவும்நான் மன்னுமிரும் நானவ் விருவரையும்
ஏவுவான் றானும்நான் என்றுணர்த்தக்-கோவலர்பால்
ஆனுமாய் ஆன்கன்றும் ஆகி அவற்றைமேய்ப்
பானுமாய் நின்ற பரஞ்சோதி—மாநகரப்
பேரிரு ணீக்கப் பெருந்தவம்வேண் டாஉடலில்
ஆருயிர் கூட்ட அயன்வேண்டா—பாருமெனச்
சங்கத் தொனியுந் தடங்குழ லோசையெனும்
துங்கத் தொனியுந் தொனிப்பிப்போன்—பொங்குமலை
மோதும் பரனாதி மூலம் இவனென்றே
ஓதுங் கரியொன் றுடையமால்—மூதுலகைத்
தந்திடுவோ னுந்துடைப்போன் றானுநா னென்றுதிரு
உந்தியால் வாயா லுரைத்திடுவோன்—பைந்தமிழால்
ஆதிமறை நான்கையு நாலாயிரத்து நற்கவியால்
ஓதும் பதினொருவர் உள்ளத்தான்—பாதமெனும்
செந்தாமரைமலரிற் சிந்திய தேன்போல
மந்தா கினிவழியும் வண்மையான்—சந்ததமும்
ஆன்ற வுலகம் அறியும் அறியாமையுமாத்
தோன்றத் துயிலாத் துயில்கொள்வோன்—ஈன்றவளைத்
தெள்ளு மணிவாயிற் காட்டிச் செகம்புறமும்
உள்ளு மிருப்ப துணர்வித்தோன்—கொள்ளைக்
கவற்சிதரு சென்மக் கடலிற் கலந்த

அவிச்சையுவர் வாங்கமுகி லானேன்—திவப்பா
மடங்கும் பரசமய வாத நதிவந்
தடங்கக் கருங்கடலு மானேன்—உடம்பிற்
புணர்க்க ஒருகிரணம் போலுமெனை யுங்கொண்
டணைக்க மணிநிற மு மானேன்—பணைக்கும்
விசைப்பூ தலவூசன் மீதிலிருப் போனும்
அசைப்போனுந் தாளுகும் அண்ணல்-இசைத்திசைத்
தூண்பிடிக்கும் வேடர் ஒருபார்வை யால்நூறு
மான்பிடிக் கின்ற வகையென்னத்—தான்படைத்த
என்பிறவி யெண்பத்து நான்குநூ றாயிரமும்
தன்பிறவி பத்தாற் றணித்திடுவோன்-முன்புபுகழ்ந்து

பத்துறுப்பு

மலை

ஏத்திருவா நீங்கா திருக்கையா லேகேச
வாத்திரி யென்று மணிபெற்றுக்—கோத்திரமாம்
வெங்காத் திரஞ்சேர் விலங்குகளை மாய்த்திடலாற்
சிங்காத் திரியென்னுஞ் சீர்மருவி—எங்கோமான்
மேய்த்த நிரைபோல வெற்புகள்எல் லாஞ்சூழ
வாய்த்த நிரையில்ஒரு மால்விடையாய்ப்—பார்த்திடவால்
இன்னியம் ஆர்க்கும் இடபகிரி யென்னும்பேர்
மன்னிய சோலை மலையினன்—எந்நாளும்

ஆறு

பொற்சிலம்பி லோடுஞ்சாம் பூநதம்போன் மாணிக்க
நற்சிலம்பி லோடும் நதியாகி—கற்சிலம்பில்
இந்திரன் போலும் இடபா சலம் அவன்மேல்
வந்தவிழி போலும் வளைச்சுனைகள்—முந்துதிரு
மாலுடைய தோளின் மணிமார்பின் முத்தாரம்
போல வருநூ புரநதியான்—சீலமுறும்

### நாடு

பன்னிரு செந்தமிழ்சேர் நாடுகளும் பார்மகட்கு
முன்னிருகை காதுமுலை முகங்காய்—பின்னகங்கண்
105 காட்டும் அவற்றுட் கனகவரை மீதுபுகழ்
தீட்டும் புனலுடுந் தென்னாடும்—நாட்டமாம்
அந்நா டிரண்டில் அருள்சேர் வலக்கணெனும்
நன்றுடாந் தென்பாண்டி நாட்டினன்—பொன்னுருவர்

### நகர்

சந்த்ரவடி வாஞ்சோமச் சந்திரவி மானத்தை
இந்திரவி மானம் இதுஎன்றும்—மந்த்ரவிரு
துக்கொடி யேறு துசத்தம்பம் வல்லிசா
தக்கொடி யேறுகற்ப தாருஎன்றும்—மிக்கோர்க்
கொருவாழ்வா னோனை உபேந்திரனே யென்றும்
திருமாலை யாண்டானைத் தேவகுரு—வென்றும்
110 நண்ணிய சீர்பெற்ற நம்பி முதலோரை
விண்ணவர்கோன் ஆதி விபுதரென்றும்—என்றுதலாம்
ஆர்பதி யான அமரா பதிபோலும்
சீர்பதி யான திருப்பதிவான்—மார்பிடத்தில்

### தார்

எண்ணுங் கலனிறத்தோ டிந்திரவிற் போற்பசந்த
வண்ணந் தருந்துளப மாலையான்-உன்னின்று

### கரி

உருக்கும் வினைவமா மோங்குமதம் பொங்கத்
திருக்கொம்பு தான்றுதிக்கை சேர—நெருக்கிய
பாகமொத்த வைகான தம்பாஞ்ச ராத்திரமாம்
ஆகமத்தின் ஓசைமணி யார்ப்பெடுப்ப—மோகமறு
115 மட்டும் பிணிக்கும் வடகலையுந் தென்கலையும்
கட்டும் புரசைக் கயிருக—விட்டுவிடா

ஆனந்த மான மலர்த்தாள்கண் டத்துவி
தானந்த மென்றகளி யானையான்—தானந்த

பரி

வர்க்கத் துடனெழுந்து வாயி னுரைகடந்து
கற்கி வடிவுநலங் காண்பித்துச்—சொர்க்கத்தில்
ஏறுங் கதிகாட்டி எய்தும் அனுந்தோற்றி
வீறும் பலகலையும் வென்றோடி—ஆறங்கம்
சாற்றிய தன்னங்க மாய்க்கொண்டு தாரணியிற்
போற்றிய வேதப் புரவியான்—பாற்கடலிற்

கோடி

புக்கதொரு மந்தரமும் பூமியும் பம்பரமும்
சக்கரமும் போலத் தலைசுழன்று—நொக்கவிசை
வற்றும் பொழுதுவிழ வாசுகியைச் சேடனைப்
பற்றுங் கருடப் பதாகையான்—சுற்றியதன்

முரசம்

குன்றில்அரி புங்கரியுங் கொண்மூவு நின்றதிர
முன்றில் அதிர்மும் முரசினன்—என்றும்

ஆணை

அவனசை யாமல் அணுவசையா தென்னும்
நவநிலை யாணை தரித்தோன்—நவநீதம்
மேனியிற் சிந்தியதும் மென்கையி லேந்தியதும்
வானில் உடுவும் மதியுமெனத்—தானுண்டோன்
செங்கதிரும் வெண்கதிரும் என்னத் திருவிழியும்
சங்கமுஞ் சக்கரமுந் தாங்கினோன்—அங்கணுல
குண்டகனி வாயான் உறையுந் திருவயிற்றான்
கொண்ட படியின்ற கொப்பூழான்—மண்டி

அளந்த திருந்தாளான் அன்றேற்ற கையான்
விளைந்த பொருள்காட்டும் மெய்யான்—உளங்கொண்
டிடந்த மருப்பினு னேந்து முதுகான்
படந்தனில் கைத்தமணிப் பாயான் —தொடர்ந்தவினை
மூட்டறுக்குந் தன்னும மூன்னித் திருநாமம்
இட்டவருக் கீவோன் இகபரங்கள் —எட்டெழுத்தாந்
பிஞ்செழுத்தாய் நையும் பிரம லிபியெனும்பேர்
அஞ்செழுத்தை மூன்றெழுத்தாக்குவோன்-வஞ்சமறத்
தங்கன்குன் றெங்கிருந்துஞ் சங்கரன் ஆதியோர்
ஙங்கள் குன்றீ தென்னவரு ளன்புடையோன் —அங்கோர்
வயமுனிக்குக் கண்ணிரண்டு மாற்றினேன் போற்றும்
கயமுனிக்குக் கண்கொடுத்த கண்ணன்—நயமுரைக்கின்
அஞ்சுபடை யோனெனினும் அஞ்சாமல் அங்கையில்வா
சஞ்செய்யு முத்யோகச் சக்கரத்தான்-ஈஞ்சாது
விண்ணிலங்கொள் பொன்னிலங்கை வெற்றியாய்க் [கொண்டாலும்
மண்ணிலங்கைந் தானமாய் வாங்குவோன்-பண்ணிலங்கும்
ஏரணி பொன்னரங்கத் தெம்பிரான் போலீவர்க்கும்
தாரணி நல்காத தம்பிரான்—காரணியும்
செங்கைத் தலத்திடத்துந் தென்மதுரை யூரிடத்தும்
சங்கத் தழகனெனுந் தம்பிரான்—எங்கும்
திருப்பாது கைக்குஞ் செழுங்கருட னுக்கும்
திருப்பாது கைக்கும்அர சீந்தோன்—விருப்பமுகம்
சந்திரன் ஆன சவுந்தர வல்லியுடன்
சுந்தர ராசனெனத் தோன்றினேன் —அந்தம்
சொலகலங்கொ டோன்அழகார் சுந்தரத் தோளன்
மலையலங் காரனென வந்தோன்—பலவிதமாய்
நண்ணியதெய் வத்தை நாரெல்லாம் பூசித்த
புண்ணியமே தன்னைவந்து பூசித்தோன்-கண்அனைய
யாத கமலம் பரவுமல யத்துவசன்

பாத கமலம் பறித்திடுவோன்—கோதில்
அரணும் புயங்களுறும் அம்பரீ டற்குச்
சரணம் புயங்கள் தருவோன்—திருநாளில்

### கோடைத் திருவிழா

சந்தக்கா லூடு தவழ்ந்துவருந் தென்றற்கால்
மந்தக்கா லாக மருவுங்காற்—சிந்திக்கும்
வாடைத் துளிபோன் மலர்த்தேன் றுளிதுளிக்கும்
கோடைத் திருவிழாக் கொண்டருளி—நீடுவிடைக்

### தல்லாகுளம் வருதல்

குன்றிலுற்ற வெள்ளங் கொழுந்தோடி வையைதனிற்
சென்றெதிர்த்து நிற்பதெனச் செப்பியோர்-அன்றெதிர்த்தக்
கூடலிற் கூடலெனுங் கூடத் திருநகரில்
ஏடலர் தாரான் எழுந்தருளி—ஆடலுடன்
கல்லா குளங்கள் கரையப் பணிவார்முன்
தல்லா குளம்வந்து சார்ந்தருளி—மெல்ல

### வையைக்கரைத் திருக்கண்களில் வைகுதல்

நரலோக மீது நடந்துவரு கின்ற
பரலோக மென்றுசிலர் பார்க்கச்—சுரலோகத்
திந்திரவி மானமிது என்றும் இதுசோமச்
சந்திரவி மானமே தானென்றும்—முந்தியவட்
டாங்க விமானம் அவையிரண்டும் என்னவே
தாங்கு விமானந் தனிற்புகுமுன்—தீங்கிலார்
உன்னி விமானம் உரத்தெடுக்கும் போதனந்தன்
சென்னிமணி யொன்று தெறித்தெழுந்த—தென்னவே
உம்பரில் வெய்யோ னுதயஞ் செயக்குதிரை
நம்பிரா னேறி நடந்தருளி—அம்பரத்திற்
கோடி கதிரோனும் கோடி பனிமதியும்
ஓடி நிரையா உதித்தவென—நீடிய

பொற்கொடியும் வெள்ளிக் குடையும் பொலிந்திலங்க
விற்கொடிகள் விண்ணோர் வெயர்துடைப்பச்—சொற்கத்
தியலுங் கரியுமதி லேற்று முரசும்
புயலும் உருமேறும் போலக் கயலினத்தை
அள்ளுந் திரைவையை யாறுட் பரந்துநா
வெள்ளங் கரைகடந்து மீதூர—வள்ளல்
திருத்தகு மேகம்போற் செல்லுதலால் நீர்தூம்
துருத்தி மழைபோற் சொரியக்—கருத்துடனே
வாட்டமற வந்து வரங்கேட்கும் அன்பருக்குக்
கேட்டவரம் ஊறுங் கிணறுபோல்—நாட்டமுடன்
காணிக்கை வாங்கஅன்பர் கைகோடி யள்ளிவிடும்
ஆணிப்பொற் கொப்பரைமுன் னாகவரக்—காணிற்
புரந்தரற்கு நேரிதென்று போற்றிசைப்ப வோரா
வீரந்திருக்கண் வையைநதி யெய்தி—உரந்தரித்த

### வண்டியூர் மண்டபம் வந்து தங்குதல்

வார்மண்டு கொங்கை யனம்போல் விலங்குவண்டி
யூர்மண்டபத்தி னுவந்திருந்து—சீர்மண்டு

### ஆதிசேட வாகனத்திற் பவனி வருதல்

மாயனுக்கு வாகனமாய் வாவென்று சேடனைத்தான்
போயழைக்க வெய்யோன் புகுந்திடலும் - தூயோன்
மருளப் பகலை மறைத்தவன் இப்போ
திருளைப் பகல்செய்தா னென்னத்—தெருளவே
அங்கிக் கடவுளும்வந் தன்பருட னாடுதல்போற்
திங்கட் கடவுள்சே விப்பதுபோற்—கங்குற்
கரதீப மும்வாணக் காட்சியுங் காண
வரதீப ரூபமாய் வந்த—திருமால்
அவனி பரிக்கும் அனந்தாழ்வான் மீது
பவனிவரக் கண்டு பணிந்தேன்—அவனமுகிற்

## மால்கொண்ட தலைவி கூற்று

பின்னமுரு முன்னமுகாம் பேரழகைக் காணுமுன்னே
முன்னழகைக் கண்டேனான் மோகித்தேன்—பின்னமுரு
நானேகண் டாலுந் தனக்குத் துயர்வருமென்
றேனோரை நோக்கி யெழுந்தருள—ஆனோன்
விமலத் திருமுகமு மென்மார்பின் மேவும்
கமலத் திருமுகமுங் கண்டேன்—அமலன்
அரவணையா னென்பதுமுன் டன்னல் அரன்போல
இரவணையா னென்பதுமுன் டேனும்—பரவைத்
திருவணையா னென்றுநிசஞ் செப்புவது பொய்யென்றே
உருவணையு மாதர்க் குரைத்தேன்—மருவணையும்
செங்கரத்தில் அன்று திருடியவெண் ணெய்போலச்
சங்கிருக்க என்சங்கு தான்கொண்டீர்-கொங்கை
மலையருவி நீருமக்கு மாலிருஞ் சோலைத்
தலையருவி நீர்தானோ சாற்றீர்—விலையிலாப்
பொற்கலை ஒன்றிருந்தாற் போதாதோ அன்றுபுனை
வற்கலையி லேவெறுப்பு வந்ததோ—நற்கலைதான்
ஆரஞ்சேர் கொங்கைக் களித்த தறியீரோ
சோரந் திரும்பத் தொடுத்தீரோ—ஈரஞ்சேர்
நூலாடை யாமெங்கள் நுண்ணாடை தாமுமக்குப்
பாலாடை யாமோ பகருவீர்—மாலாகி
மொய்த்திரையும் எங்கள் மொழிகேளீர் பாற்கடலில்
நித்திரைதான் வேகவதிநீரிலுண்டோ—இத்தரையிற்
பொங்குநிலா வெள்ளம் பொருந்திற்றோ பாற்கடல்தான்
அங்குநிலா தும்மோ டணைந்ததோ—கங்குலெனும்
ஆனை கெசேந்திரன் ஆகிலதன் மேல்வருவன்
பூனையும் விட்டு விடலாமோ—கானச்
சதிரின மாதர் தமக்கிரங்கு வீர்நெஞ்
சதிரினமா தர்க்கிரங்கொ ணாதோ—முதிர்கன்றைக்

கொட்டத்து வெண்பால் குளிர்ந்துகறப் பார்முலையில்
விட்டுக் கறப்பதையும் விட்டீரோ—கிட்டப்போய்
மென்பால் தெறித்த வியன்முலையைப் பார்குடமென்
றன்பால் எடுத்த தறியீரோ—மின்போல்வார்
செவ்விதழின் மேலே தெறித்தவெண்ணெ யுண்பதுபோல்
அவ்விதழை யுண்ட தயர்த்தீரோ—செவ்விதழை
குன்றன் றெடுத்தீர் குளிரும் அமு தங்கடைந்தீர்
சென்றன்று பாம்பில்நடஞ் செய்தீரே—என்றென்று

சோலைமலை யடைதல்

கொண்டபஞ் சாயுதன்மேற் கொள்கைபெறத் தேனூர்
மண்டபஞ் சார்வாய் வலங்கொண்டு—பண்டை
விரசையுடன் வைகுந்த வீடும்இது என்னப்
புரசைமலை காத்தோன் புகுந்தான்—வரிசை
உபசாரங் கொண்டருளி ஓர்சிவிகை மீது
தபசாரஞ் சீபதியைச் சார்ந்தான்—இபமுண்ட

தலைவி தன் நிலைமை கூறுதல்

வெள்ளிற் கனியானேன் வேதனை யீன்றவன்றன்
உள்ளிற் கனியானே னூர்ந்துவரும்—பிள்ளைமதி
செவ்வை மதியோ திரைக்கடல் வாய்ச்சிறிதோ
கோவ்வையித மார்மொழிதான் கூற்றன்றோ-எவ்வமுறும்
காற்றேரி னுனும்ஒரு காலன்அன் றேவுருக்கி
ஊற்றுத சேமணியும் ஒன்றுண்டோ—வேற்றுக்
கிளையோடு வாடிக் கிடந்தாலுஞ் சுட்டுத்
தளையாக் குழலும் உண்டோ சொல்வாய் - கிளியரசே

தலைவி கிளிக்கு முகமனுரை மொழிதல்

என்கூடு பொன்கூடும் இந்த நிறத்தினால்
உன்கூடும் என்கூடும் ஒன்றுகாண்—என்கூட்டில்
மாங்கனி யுண்டு வளஞ்சேர் செழுங்கொவ்வைத்
தீங்கனி யுண்டா சினியுண்டு—பாங்கிற்

குழையுமன முண்டு குழம்பிய பாலுண்
டுழையே தெளிபாலு முண்டு—விழைவறிந்
தூட்டுவேன் உன்னை யுருப்பசியா யென்னநலங்
காட்டுவேன் பட்டாடை யாற்றுடைப்பேன்—கூட்டில்
அரசா யிருத்தியா லத்தி யெடுத்துப்
புரைதீர் நறையும் புகைப்பேன்—அருகே
இளவெயிலிற் காய்வித் தெடுத்தொருகால் முத்தி
வளையயில் கையின்மேல் வைத்துத்—துளபமணி
ஈசன் திருநாம மெல்லாம்என் போல்எனக்குப்
பாசந் தொலையப் பயிற்றுவேன்—பேசென்றே

வேறு பறவை தூதுகூறு வென்றல்

ஈடுபட்ட வென்னை எகினத்தைத் தூதுவிட்டாற்
சூடுபட் டார்துணிந்து சொல்வாரோ—கூடுகட்டி
அன்பாய் வளர்த்ததா யார்க்குதவாக் கோகிலந்தான்
என்பா லருள்வைத் தியம்புமோ—தன்பேர்
அரியென்று சொன்னு லளியென்று சொல்லும்
வரிவண்டு பேசி வருமோ—விரகஞ்செய்
வன்கால திக்கின் மலைவா யிருக்கின்ற
தென்காலும் என்காதல் செப்புமோ—பொன்காதல்
வண்டலையுர் தாரான்முன் மாதரையெல் லாந்தூற்றும்
கொண்டலையுந் தூதுவிடக் கூடுமோ—உண்ட
படியேழுங் காக்கும் பரங்கருணை யான்முன்
கொடியோரும் போவாரோ கூறும்—அடியார்கள்

தத்தையே! நீதான் தகுதி என்றல்

அங்கிருந்தாற் கீர்த்தனஞ்செய் வாயடுத்த நாச்சியார்
பங்கிருந்தாற் கையிற் பறந்திருப்பாய்—எங்கிருந்து
வந்தாயென் றுன்மா லிருஞ்சோ லையிலிருந்
தெந்தா யுனைத்தொழவந் தேனென்பாய்—அந்தச்

சவுந்தர வல்லியெனுந் தற்சொரு பிக்கும்
உவந்தலர்சூ டிக்கொடுத்தா ளுக்கும்—சிவந்த
கடுகிலே சங்கோபங் காணுமெ லென்மால்
வடுகிலே சொல்வாய் வகையாய்—அடுகிலே
சங்கெடுப்பாய் சங்கெடுக்குஞ் சச்சிதா னந்தரணி
கொங்கெடுக்குந் தாமங்கொடுவருவாய்—அங்கடுக்கின்

இடமும் அமையமும் எடுத்துரைத்தல்

ஒருகத்தில் ஆலாகி யோருகத்தி லேஅரசாய்
ஒருகத்தி லேவில் லுவமாகி—ஒருகத்திற்
புத்திர தீபமுமாய்ப் புங்கவர்க்கா ருந்தருவாய்ச்
சத்தி தருமோர் தருவுண்டு—மொய்த்த
ஒருகோடி காவுண் டொருகோடி யாறுண்
டொருகோடி பூஞ்சுனையு முண்டு—திருமால்
அறங்காக்கும் யோகிகள்போல் அல்லும் பகலும்
உறங்காப் புளிதானும் உண்டு— திறஞ்சேர்
பிதாமக னேடுறையும் பெற்றி விளங்கப்
பிதாமகன் வந்துபுகழ் பேசச்—சதாகால
முந்திரமாய் வாழும் உபேந்திரனங் கில்லையென
இந்திரனூர் வந்தங் கினிதிறைஞ்சப்—பிந்திய
தம்பியர் மூவருக்குந் தானே யரசீந்த
நம்பி திருத்தாளை நம்பினோர்—வெம்பிறவித்
தேகம் பவித்திரஞ்செய் சீரங்க ராசபட்டர்
ஆகும்ப்ர சித்தராம் அர்ச்சகரும்—மோகமுறும்
வெங்குன் மலமாயை கன்மம் விளங்காமற்
செங்கையி லோங்குதிரி தண்டேந்திச்—சங்கையறச்
செய்யுந் திருமா லிருஞ்சோலைச் சீயரென
வையம் விளங்கவரு மாதவரும்—பொய்யில்லா
ஞானதீ பங்காட்டி நன்னெறிகாட் டென்றெருப
மானதீ பங்காட்டி வந்துநின்று—மேனுவில்

(முத்தமிழ்க்குப் பின்போவார் முன்போகப் பின்போன)
அத்தன் திருமாலை யாண்டானும்—பத்தியினால்
வையங்கார் வண்ணனையே வாழ்த்தவருந் தோழப்
பையங்கா ரென்னும் ஆ—சாரியரும்·மெய்யன்பாம்
சிட்டர்க டேவர்க ளாகத் தினம்பரவும்
பட்டர்க ளாம்வேத பாரகரும்—விட்டுவெனும்
சோதிகரு ணைக்கடற் றோன்றிக் காசர
ணுதியுடன் வந்த அமுதரும்—முதுலகிற்
நண்ணத் துழாயழகன் நந்தந் திருமலைபோல்
நண்ணுந் திருமலை நம்பிகளும்—உண்ணின்ற
மாலைமலை சோலை மலையையே நம்புதலாற்
சோலைமலை நம்பியெனுந் தூயோரும்—மேலை
விரிஞ்சன் முதலோர்க்கும் விட்டுப் பிரசாதம்
தருஞ்சட கோபநம்பி தாமும்—பெருஞ்சீர்
வரியெழுதிக் கற்றதிரு மாலிருஞ் சோலைப்
பிரியரெனுஞ் சீர்கருணைப் பேரும்—கிரியிருந்
தாளுங் கடவுள் அநேனே துணையாயெந்
நாளுஞ்சீ காரியஞ்செய் நாயகரும்—தான்வணங்க
ஆர்த்ததிரு வோலக்க மாயிருப்பன் அப்பொழுதுன்
வார்த்தை திருச்செவியில் வாயாது—சேர்த்தியிலே
மெல்ல எழுந்தருளும் வேளைபார்த் தவ்வேளை
(சொல்ல எழுந்தொருவர் சொல்லாமுன்—வெல்லு)
அம்பலர் தூற்ற அடர்த்து வருமுன்னே [மதன்
வம்பலர் தூற்ற வருமுன்னே—கும்பமுனி
வாயி னுரையடங்க வந்த கடலடங்கத்
தாயின் உரையடங்கத் தத்தையே—நீபுரையாய்

மருமாலை வாங்கி வா என்றல்

உன்பேர் சுவாகதரென் றேதுகை யாலுனக்கும்
அன்பேர் சுவாகதமுண்டா குங்காண் முன்பொருநாள்

335 கோசலை கையிற் குருசில் உனைப்புகழ்ந்து
பேசின் உனைப்புகழ்ந்து பேசாரார்—நேசமுடன்
எம்முடைய மாலை இருபுயத்து மாலைகேள்
உம்முடைய மாலை உதவிரேல்—அம்மைதிருக்
கோதையார் சூடிக் கொடுத்து வரவிட்ட
தாதையார் மாலைதனைத் தம்மின் என்பாய்—நீதி
அடுப்பவர் யாவர்க்கும் ஆடித் தியாகம்
கொடுப்பவன் இல்லையென்றுகூறுன்—தடுக்கும்
339 அருமாலை நீக்கும் அழகன் புயத்து
மருமாலை நீவாங்கி வா.

———

## 'தூது' என்ற நூல் இலக்கணம்:

### இலக்கண விளக்கச் சூத்திரம்

பயிறரும் கலிவெண் பாவி னாலே
உயர்திணைப் பொருளையு மஃறிணைப் பொருளையும்
சந்தியின் விடுத்தல் முந்துறு தூதெனப்
பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே.

### இரத்தினச் சுருக்கம்

இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை
பயம்பெறுமே கம்பூவை பாங்கி—யெந்தகுயில்
பேதைநெஞ் சந்தென்றல் பிரமரமீ ரைந்துமே
தூதுரைத்து வாங்குந் தொடை.

—

உ

திருச்சிற்றம்பலம்

# விளக்க உரை

---

## காப்பு

(சொற்பொருள்) தெள்ளு தமிழ் அழகர் சேபதி வாழ்வார் மீது - தெளிவாகிய தமிழ்மொழியை விரும்பும் அழகர் ஆகிய சேபதியில் வீற்றிருக்கும் திருமால்மீது, கிள்ளை விடு தூது ஓத-"கிள்ளைவிடு தூது" என்ற நூல் பாடுவதற்கு, பிள்ளைக் குருகு வர தானே சங்கு ஊர் கமுகில் ஏறும் - இளமையான பறவைகள் ஊர்ந்து வருவது கண்டு அஞ்சிச் சங்கு தானாகவே பார்த்து கமுகமரத்தில் ஏறி ஒளி நின்ற (வளம் பொருந்திய). குருகூர் அத்தான் நேசம கூர் - ஆழ்வார் திருநகரியில் எழுந்தருளியுள்ள தலைவனே! அன்பு மிக வைத்து அருள் புரிவாய், ஏ: அசை.

(கருத்து) அழகர்மேற் கிள்ளைவிடு தூது நான் பாடுவதற்குக் குருகூரிற் பிறந்த மாறனே! நீ அருள்புரிந்து உதவி செய்வாய்.

(விளக்கம்) இது வைணவ சமயத்திற்குரிய நூல் ஆதலாற் குருகூரிற் பிறந்த நம்மாழ்வார் வணக்கம் முதலிற் கூறப்பட்டது. சைவசமய நூல்களுக்குப் பிள்ளையார் காப்புச் சொல்வதுபோல இதற்கு இவ்வாழ்வார் வணக்கம் கூறுவது மரபு. "குருகூர் மலர்க்குழலாய் மூதுரையாற் சொல்வன், குருகூரனைத் தொழுது கொண்டு" என்று பிறருங் கூறுதல் காண்க. சேபதி என்பது திருமாலிருஞ் சோலைமலைக்கு வடமொழிப் பெயர். அழகர் என்பதற்கு வடமொழியில் 'அலங்காரர்' என்று கூறுவர். நூலாசிரியர் தாம் எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற்-

பொருட்டுத் தாம் வழிபடு கடவுளையாயினும் நூலிற்கு ஏற்புடைக் கடவுளையாயினும் வணங்குவது மரபு. அம்முறையில் இஃது ஏற்புடைக் கடவுள் வணக்கம் கூறியது என்க. திருமழிசையாழ்வார் காஞ்சியில், "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவுடைய, செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்று பாடிய பாடல் கேட்டு அவர்பின் சென்றவர் திருமால் ஆதலால் அவர் தமிழ்மொழி விருப்பமுடையவர் என்பதுதோன்ற 'தென்னு தமிழ் அழகர்" என்றார். குமரகுருபரரும் "பணிகொண்ட துத்திப் படப்பாய்ச் சுருட்டுப் பணைத்தோ ளெருத்தலைப்பப், பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்று திருமாலைத் துதிப்பதும் காண்க. சிபதி வாழ்வார் ஆகிய அழகர் எனக் கூட்டுக. பிள்ளைக்குருகு - பறவைக்குஞ்சுகள். அவை பறக்க முடியாமல் ஊர்ந்து திரியும். அவற்றைக் கண்டு சங்குகள் பயந்து கமுக மரங்களில் ஏறி மறையும் என நீர்வளம் கூறினர். ஏரி, குளம், கால்வாய்களில் நீர்பெருகி யிருப்பதால் மீன்கள் மிதந்து திரியும் என்றும், அவற்றை இரையாகக் கவர்ந்துண்ணப் பறவைக் குஞ்சுகளும் வரும் என்றும், சங்குகளும் நீரில் ஊர்ந்து திரியும் என்றும், குஞ்சுகள் ஊர்ந்துவருவது கண்டு அஞ்சி அண்மையில் வளர்ந்த விற்கும் கமுகில் ஏறி ஒளிந்துகொள்ளும் என்றும் குருகூரின் நீர்வளம் தோன்றுதல் காண்க. அத்தன் என்பது அத்தான் என நீண்டு நின்றது செய்யுள் நோக்கி. அத்தன்-தலைவன். இஃது, அண்மை விளியாய் மாறனை யுணர்த்திற்று. நேசம் - அன்பு. அன்பின் குழவியாகிய அருளை யீன்றுணர்த்தியது. அருள்கூர் என்பது பொருள் இடையூறின்றி இனிது முடிவதற்குத் திருவருள் புரிக என்பது கருத்து.

---

# நூல்

## கிளியை விளித்தல்

### கண்ணிகள் 1—2: கார்கொண்ட......செப்புக்கேள்

(சொற்பொருள்) கருமைநிறம் பொருந்திய வடிவ முடைய (திருமால் என்ற) தெய்வத்தின் பெயர் ஆகிய அரி என்ற பெயரைக்கொண்டு அத் திருமால் சீரித் படுத்துறங்கு வதற்கு விரித்த படுக்கையாகிய ஆலிலையின் பசுமை நிறத்தையுங் கொண்டு சிறப்புப்பொருந்திய ஐந்து அம்புகளை அடைத்து வைத்திருக்கும் மன்மதனையும் மேற்கொண்டு (யாவர்க்கும்) இன்பத்தைக் கொடுக்கும் கிளியரசே! நான் சொல்வதைக் கேட்பாயாக.

(விளக்கம்) "கார்கொண்ட" என்ற முதற்சீரில் மங்கலம், சொல், எழுத்து, தானம், பால், உண்டி, வருணம், நாள், கதி, கணம் என்ற பத்துப் பொருத்தமும் அமைந்திருப்பது காண்க. பண்டைக்காலப் புலவர்கள் சிற்றிலக்கியங்களிற் கூடப் பொருத்தங்களை யமைத்தே பாடினர் எனத் தோன்றுகிறது. தெய்வங்கள்மீது பாடும் நூல்களுக்குப் பத்தும் வேண்டுவதின்று. மங்கலம், சொல், எழுத்து மூன்றுமட்டுமே மற்றைப் புலவர் அமைத்திருக்கின்றனர். மானுடர்மீது பாடிய நூல்களில் எல்லாம் அமைத்துப் பாடும் மரபு காண்கின்றோம். கார்கொண்ட என்பதற்கு மேகம் போன்ற எனவும் பொருள் கூறலாம். திருமால் பெயர்களில் அரி என்பதும் ஒன்று. கிளிக்கும் அரி என்பது பெயர் ஆதலாற் "கடவுள் பெயர் கொண்டு" என்றார். பாம்பும் திருமாலுக்குப் பாயல் ஆயினும், "நிறங்கொண்டு" என்ற குறிப்பினால் ஆலிலை எனப் பொருள் தந்தது பாயல். முல்லை, அசோகு, நீலம், தாமரை, மா என்ற மலர்கள் ஐந்தும் காமனுக்கு அம்புகள் ஆதலால் "ஐயம்பு அடைக்கும் மதனையும்" என்றார். மன்மதனுக்குக் கிளி குதிரையென நூல்களிற் கூறப் படுவதால் அவனை நீ சுமந்து வருகின்றாய் என்ற பொருள் தோன்ற "மதனையும் மேற்கொண்டு" என்றார். "ஆலைக் கரும்பு சிலைபைங்கணை பூ நாண்கரும்பு, மாலைக் கிளி புரவி மாருதம்தேர் — வேலை, கடிமுரசம் கங்குல் களிறுகுயில் காளம், கொடிமகரம் திங்கள் குடை" என்ற வெண்பாவால் மன்மதனுக்குரிய அரசுப் பொருள்களை யறியலாம். "கிளி புரவி" என்றது இங்கு அறிக.

பாவை. மதன் உலகத்தார்க்குக் காதலையுண்டாக்கி இன்பத்தைக் கொடுக்கும் தெய்வம்; அத் தெய்வத்தைத் தாங்கி வருவதால் நீ இன்பஞ் செய்வாய் என்ற கருத்து விளங்க "இன்பம் செய்யும் கிளியரசே" என்றார். "சீர் கொண்டவையம் படைக்கும் அதனையும்" எனப் பிரித்தால், சிறப்புப் பொருந்திய உலகத்தை உண்டாக்கும் அத் தொழிலையும் நீ மேற்கொண்டாய் என மற்றும் ஒருபொருள் வெளிப்படுவது காண்க. காக்குங் கடவுள் ஆகிய திருமாலின் பெயரையும் கொண்டு அவர் பாயல் விரத்தையும் கொண்டு காமனுக்குப் புரவியாகி அவனை மேற்கொண்டு எல்லாவுலகங்கட்கும் இன்பத்தைத் தருகின்ற கிளியரசே! நான் ஒன்று சொல்ல, நீ அதனைக் கேள் என வினை முடிவு செய்க.

**2—3: வையம் எலாம்......கேளாதவர் ஆர்காண் கிள்ளையே**

(சொ - ள்.) கிளியே! உலக முழுவதிலும் மன்மதன் ஆட்சி செலுத்துதல் என்னும் இன்பம் தோன்றுவதற்கு உன் சொல்லைக் கேளாதவர் யார்தாம் உளர்? (ஒருவரும் இலர்)

(வி - ம்) "யானை யிரதம் பரியாளிவையில்லை, தானுமனங்கன் றனுக்கரும்பு - தேனூர், மலரம்பி னல்வென் றடிப்படுத்தான் மாரன், உலகங்கள் மூன்றும் ஒருங்கு" என்றபடி மூவுலகத்தும் வேள் ஆணை செல்லும் என்பதுதோன்ற "வையம் எலாம்" என்றார். ஆண்மை - ஆட்சி. இது காமவின்பத்தைக் குறித்தது. அவன் ஆட்சியால் விளைவது அதுவே யாதலின், மக்களுக்குக் காமவின்பம் தோன்றியபோது கிளியின் சொல்லைக்கேட்டு மகிழ்வர்; காதலர்க்குக் கிளியின் சொல் இன்பத்தை விளைக்கும் ஆதலான் "கேளாதவர் ஆர்" என்றார். "உலகமெல்லாம் வேளாண்மைத் தொழில் ஆகிய பயிர் விளைச்சலுக்கு நின் வார்த்தை கேளாதவர் ஆர்" என வெளிப்பொருள் ஒன்று தோன்றுவதும் காண்க.

**3—5: நாளும் மலைத்திடும்......பரி ஏழும் உனக்குஎதிரோ**

(சொ - ள்.) ஒவ்வொரு நாளும் மக்களைப் போர் செய்து வருத்தும் மன்மதன் ஒரு சக்கரமுமில்லாமற் செலுத்துகின்ற காற்றாகிய தேரினை முற்றும் எழுச்சியுடன் பலமாயிழுத்துக்கொண்டு திரிகின்ற பச்சைப் புரவியே! முற்காலத்திலிருந்து சூரியன் தேரினை இழுத்துத் திரிகின்ற

பச்சைக் குதிரைகள் ஏழும் கூடினும் உனக்கு ஒப்பாகுமோ? (ஆகாது.)

(வி - ம்) நாளும் காம விழைவு மக்கட்குத் தோன்றுவதால் அதற்குக் காரணம் அவன் போர் புரிவதே என்பது தோன்ற "நாளும் மலைத்திடு மாரன்" என்றார். சூரியனுடைய தேரில் ஒற்றைச் சக்கரம் உண்டு. ஒற்றைச் சக்கரமுடைய தேரினை ஏழு குதிரைகள் கூடி இழுக்கின்றன; ஒரு சக்கரமும் இல்லாத மதன் தேரினை நீ தனியே இழுத்துச் செல்கின்றாய்; அவற்றிலும் மிக்க பலமுடைய நீ என ஒப்பாகாமைக்குக் காரணம் காட்டினார். கால்-காற்று. கால்+தேர்=காற்றேர் என்றாயிற்று. வண்டில்-சக்கரம். கால் பங்கு ஆக இருந்த தேரை நீ முழுத் தேராக்கி இழுத்துத் திரிகின்றாய் என வேறு பொருள் தோன்றுவது காண்க. முழுத்த+ஏர்+ஆய்=முழுத்தேராய் என அகரம் குறைந்து நின்றது. இது தொகுத்தல் விகாரம். முழுத்த-முற்றிய. ஏராய்-எழுச்சியாக. குதிரை என்பது குதிராய் என விளியாயிற்று.

5—6: கண்டசெக நிறைந்நீ......சொல்லாய்

(சொ - ள்.) யாவரும் பார்க்கின்ற உலக முழுவதும் நிறைந்திருக்கிறாய் நீ; ஞான விளக்கமாகவும் தோன்றுகின்றாய் என்பதை (உன் வயிற்றிற் பிறந்த) சுக முனிவரே எடுத்துக் காட்டினரே! (இதனை ஆய்ந்து) சொல்வாய்

(வி - ம்.) சுக முனிவர் என்பவர் வேதவியாசர் அருளால் கிளி வடிவங் கொண்டிருந்த "கிருதாசி" என்ற தெய்வப் பெண்ணிடம் பிறந்தவர். பிறந்தபோதே துறவு பூண்டு நிலத்தில் நடந்து காடு சென்றார். அவர் தந்தையான வியாசர் "மதலாய்" என்றழைப்ப, எல்லாப் பொருளும் "ஏன்" என்று கேட்டன என்பது வரலாறு. (சுக முனிவர் வாய் திறந்து ஏன் என்று கேட்டபோது எல்லா உயிர்களிடத்தும் அவ்வொலி தோன்றிய தால் அம் முனிவர் பெருமை யாவும் நின்பால் தோன்றிய காரணத்தால் ஆயின என்பது குறித்து "சுக முனியே சொல் லாரோ" என்றார்.) "பிறந்தபொழு தேதுறந்து பிறைக்குழவி போனடப்பப் பின் போய்த் தொன்னூல், அறைந்த புகழ் வியாத முனி யாதரத்தான் மதலா வென் றழைப்பச் செவ்வாய், திறந்து நறை பொழியு மலர்ச் செழுந்தருவு மேனென்ன வுயிர்கள் யாவும், நிறைந் துறையுஞ் சுகமுனிவ னிரையிதழ்த்தா மரை மலர்த்தா ளினைதல் செய்வாம்" (பாகவதம், காப்பு 8.) விரிவு அவர் வரலாறு காண்க.

**6—7: வகை வகையாய் எவ்வண்ணமாய்ப்...அடங்குமே**

(சொ - ள்.) பலவகையாய் எத்தனை விதமாகப் பறக்கின்ற எப்பறவையாயினும் உன் ஐந்து வகையான நிறங்களுள் ஒன்றாகத்தானே அடங்கும் (வேறு நிறம் அவற்றிற்கு உண்டோ?)

(வி - ம்.) ஐ வண்ணம்: வெள்ளை, சிவப்பு, கருமை, மஞ்சள், பச்சை என்பன. இவ்வைந்து நிறமும் உனக்கமைந்து இருப்பதால் பறவைகள் எல்லாம் உனக்குள் அடக்கமாம் என்று அதன் சிறப்புக் கூறினர் எனக் கொள்க.

**7—8: செவ்வண்ணம்.......சிவந்தாய் மொழிந்திடாய்!**

(சொ - ள்.) நின் உடல் நிறத்தைப் பார்த்தபோது பசுமையவள் என்று சொல்வார் என்று நீ நினைத்தோ, மூக்கு மட்டும் சிவப்பாக அமைத்துக்கொண்டாய் சொல்வாயாக.

(வி - ம்) பார்ப்பதி ஒரு பெருந்தெய்வம்; அவளைப்போல நாம் இருத்தல் தகுதியன்று என்று நினைந்து மூக்கைமட்டும் சிவப்பாக மாற்றியிருப்பதுபோலத் தோன்றுகிறது. பணிவும் அடக்கமும் உடையை என்பதற்கு இஃது ஓர் அறிகுறி என அதன் பெருமை கூறினர்.

**8—9: நாக்குத் தடுமாறுவோரை.......விள்வாய்**

(சொ - ள்.) நாக்குத் தடுமாறிப் பேசுவோரை (உளறுவாரை) யெல்லாம் மக்கள் தம் பக்கம் இருத்தாது தள்ளி விடுவர் (நீயும் அத்தகைய பேச்சுப் பேசினும்) உன்னைத் தள்ளி விடுவோர் ஒருவர் உளரோ? நீயே சொல்வாய்.

(வி - ம்.) உளறு வாயராய்த் திருத்தமில்லாமற் பேசுவோரைக் கண்டால் "நீ பேசுவது ஒன்றும் பொருள் விளங்கவில்லை போ வெளியே" என்று வெறுத்துப் பேசுவது மாந்தர் இயற்கை. இவ்வாறிருக்க நீ பேசுவதும் திருந்தாத சொல்லாயினும், அதனைக் கேட்க எவரும் விரும்புகின்றனரே! எத்தனை இன்மை உன் சொல்லில் இருக்கிறது!, என அதன் பெருமை விளக்கியது இது.

9—10: அடுபோர் மறந்தரு......போர்படைத்ததே

(சொ - ள்.) போரில் வெற்றியைப் பெறுகின்ற சீவகன் என்ற மன்னன் மனைவியர் எண்மரில் காந்தருவதத்தை என்பவள் சிறந்தவளாக விளங்குவதற்குக் காரணம் "தத்தை" என்ற உன் பெயரை அவள் பெற்றிருந்த சிறப்புத் தானே (வேறு ஒன்றும் உண்டோ?)

(வி-ம்.) மறம்தரு - வீரத்தைத் தனக்குத் தருகின்ற விலங் தரு திருவிற் பாண்டியன் என்பதுபோலப் பொருள் கொள்க. சீவகன் தேவியர் எண்மர்: காந்தருவதத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, விமலை, கனகமாலை, சுரமஞ்சரி, இலக்கணை என்பன அவர்கள் பெயர்கள். சீவகனுக்கு முதல் மனைவி காந்தருவதத்தை. மேலுலகிற் கலுழவேகன் என்ற விஞ்சையன் புதல்வி; இசை பாடுவதில் இணையற்றவள்: எழிலிலும் சிறந்தவள் ஆதலால், அம் மன்னனுக்கு உரிய காதலியாய்ப் பேர்பெற்றுச் சிறப்படைந் திருந்தாள். இத்தகைய சிறப்பு 'தத்தை' என்னும் நின் பெயரால் வந்தது எனக் கற்பித்துப் பெருமை காட்டியது இது.

10—11: பிறந்தவர் ஆரும்..........பிழையன்றோ

(சொ - ள்.) மனிதராகப் பிறந்தவர் எல்லாரும் எல்லாப் பறவைகளுக்கும் திருமால் பெயரையும் சிவன் பெயரையும் சொல்லும்படி கற்பித்தால் அது பிழையன்றோ? (உனக்குத் தான் அவர்கள்பெயரைக் கற்பிக்க வேண்டும்.)

(வி - ம்.) அரங்கா! அரங்கா! என்றும், சொக்கா! சொக்கா! என்றும் உனக்குக் கற்பித்தால் அப்பெயர்களைச் சொல்லியபடியே நீ சொல்வாய், மற்றைப் பறவைகளுக்குச் சொன்னால் அவை உன்னைப்போல் பேசமாட்டா. கிளி 'ரங்கா ரங்கா' என்று கூறுவது எவர்க்கும் தெரிந்தது. சொக்கர் எனக் கூறுவதை "புழுகுநெய்ச் சொக்கர் அபிடேகச் சொக்கர் கர்ப்பூரச் சொக்கர் அழகிய சொக்கர் கடம்ப வனச் சொக்கர் அங்கையற்கண், தழுவிய சங்கத் தமிழ்ச் சொக்கர் என்றென்று சந்தத நீ, பழயே சொற்குப் பயன்றேர்ந்து வாவிங்கென் பைங் கிளியே" (மதுரைக். 54) என்பதனால் சொக்கர் எனவும் கிளிக்குக் கற்பிப்பர் எனத் தெரிகின்றது.

11—12: நேர்பெறு விவேகி......உண்டோகாண்

(சொ - ள்.) ஒழுங்கு பெற்ற அறிவுடையவன் தன் உடம்பாகிய ஒரு கூட்டை விட்டு மற்றோர் உடம்பாகிய

கூட்டினும் புகுவான். அவ்யோகியும் உனக்கு ஒப்பாவானோ? (ஆகான்.) காண் : அசை; பார் எனவும் பொருள் கூறலாம்.

(வி - ம்.) யோகி தன் உடம்பைவிட்டு நீங்கிய உயிர் ஆகிய அருவப் பொருளாய் ஒருவருக்குந் தோன்றாது வேறு கூட்டிற் புகுகின்றான். அவன் மறு கூட்டிற் புகுந்ததை உண்மை யறிஞரே கண்டுகொள்ள இயலும்; மற்றையோர் காண இயலாது. நீ உன் உடம்புடனே மறு கூட்டிற் புகுகின்றாய், எல்லாரும் அறியும்படி நிகழ்கின்றது உன் செயல், அதலால் நீ யோகியரினும் உயர்ந்தாய் என்றபடி இது

## 12—14 : நீ கீரம் ஆகையால்...... ஆகாயோ

(சொ - ள்.) நீ கீரம் என்னும் பெயருடையாய் ஆதலால் ஆடை உனக்குண்டு; பாடகமும் நீ கொண்டிருப்பாய்; காலாழியும் நீங்காமலிருப்பாய்; கற்புடையாய்; காமனையும் சேர்ந்திருப்பாய்; ஆகையால் அன்புடைய பெண்கொடி நீ ஆவாய் அல்லையோ? (நீ ஒரு பெண்கொடியே ஆவாய்) என்பது.

(வி - ம்) கீரம் என்பது பாலுக்கும் கிளிக்கும் பெயர். அதனாற் பாலுக்கு ஆடையுண்டு, உனக்கும் ஆடை யுடுத்துகின்றனர். அதனால் உனக்கும் ஆடையுண்டு, எனத் தெரிகிறது. பாடகமும் காலாழியும் உனக்கும் பெண்கள் அணிந்து அலங்கரிக்கின்றனர். தம்மைப்போலவே, 'ஏகாத கற்புடையார் மாதர் - நீங்காத கற்பு உடையவர் பெண்கள்; ஏகாத கல்புடையாய் - நீ ஒருவரும் போகமுடியாத கல்லின் பக்கத்திலிருப்பாய்; காமனையும் சேர்வார் மாதர்-மன்மதனைச் சேர்ந்திருப்பார் பெண்கள் நீ காமனையுஞ் சேர்வாய். நீ சோலையாகிய வீட்டைச் சார்ந்திருப்பாய், எனப் பெண்களுக்கும் கிளிக்கும் சொல் ஒப்புக் காண்க. மன்மதனையும் மாதர் சேர்ந்திருப்பர் என்ற கருத்து மன்மதன் ஆசையுண்டாக்கும் தெய்வம் ஆதலால் அவனைச் சார்ந்திருப்பர் என்பது காதலுடனிருப்பர் என்பதை யுணர்த்தும். அன்றியும் கன்னியர் காமனைத் தெய்வமாக வணங்கி நற்காதலனைத் தருமாறு வேண்டுவர் என்பதையும் உணர்த்தும்; மாதர் காமனுக்குப் படைவீரர் ஆதலால் அவனைச் சார்ந்திருப்பர் என்பதையும் உணர்த்தும்.

## 14—17 : பொற்புடையோர் துன்னிய......உள்ளோகாண்

(சொ - ள்.) நற்குணமுடையோர் சென்று அடையும் சாயுச்சிய பதவியொன்று இன்ப வுருவமுடையது. அப்

பதவி னைக்குரிய இன்பவுருவமல்லவோ? (ஆம்) வன்னியா லுண்ணப்பட்ட பொருள் எல்லாம் தூய்மையாம் என்று கருதியே நீ சுவைத்த உன் எச்சிற் கனிகளை எவரும் உண் கின்றார். குற்றமில்லாதவர் எவரும் இனிய சொற்களையே கற்பார். நீயோ உயர்ந்தோர் தாழ்ந்தோர் என மதியாமல் யார் சொல்லும் எவ்வகைச் சொல்லையும் கற்றுக்கொள்வாய். நீ பேசுவதைக் கேட்டு உன்னைப்போல் பேசவல்லவ ரொருவ ருண்டோ? (எவரும் இலர்.)

(வி-ம்.) சுகம் என்பது கிளிக்குப் பெயர்; இன்பத்திற்கும் பெயர். சாயுச்சியம் என்பது நாலாம் பதவி; அஃது இறைவ னோடு இரண்டறக் கலந்து இன்புற்றிருக்கும் நிலை. உன் வடிவே சுகவடிவு என்றார். இதனாற் சாயுச்சியபதவி நின்றுருவந்தான் என்பது கருத்து.

வன்னி என்பது கிளிக்குப் பெயர்; நெருப்பிற்கும் பெயர் தீயிற்பட்ட பொருள் யாவும் வெந்து தூய்மையாகும் என்று கருதியோ வன்னி என்னும் பெயர் கொண்ட உன் வாயிற்கடித்த பழமாகிய எச்சிலையும் விரும்பி உண்கின்றார். இது வியப்பே என்றபடி. கிளி கடித்த பழம் கீழே கிடந்தால் அதனைக் கொம் பிற் பழுத்த பழமென்று கூறி விரும்பி எவரும் உண்பது கண்கூடு. அது கருதியே இதனைக் கூறினர்.

குற்றமில்லாத பெரியோர் இனிய சொற்களையே கற்பார்கள்; வன்சொல்லைக் கல்லார். நீயோ யார் யார் என்ன என்ன சொன்னாலும் அவற்றை அப்படியே கற்றுச் சொல்கின்றாய் எனவும், உன் சொல்லைக் கற்க வல்லார் ஒருவரும் இலர் எனவும் அதன் ஆற்றல் கூறினர் எனக் காண்க.

பொற்பு-அழகு. இஃது ஈண்டு நற்பண்பை யுணர்த்திற்று. மக்கட்கு அழகாவது அறவேயாதலின். பரிசித்த - தீண்டிய. உருசித்த - சுவைத்த. துரிசு - குற்றம்.

### 17—20: நின்போலத் தள்ளரிய போகங்கள்......விழித்திட்டாய்

(சொ-ள்.) உன்னைப்போல ஒருவராலும் தள்ள முடியாத யோகப் பயிற்சி செய்யாமலே எப்போதும் பச்சைப் பிள்ளையாய் வாழ்ந்த பெரியோர் யார்? (ஒருவரும் இலரே.) அறிஞர் உள்ளத்தால் உணர்ந்து கண்ட திருமாலைப்போலப் பூமியில் உள்ளோர் வாட்டம் நீங்கப் பாலனத்தாலே நீ பசி

நீர்க்கின்றாய். மேலினத்தைச் சார்ந்தவர் கடபிற் சிறந்தவர் எனினும் பூசையை விட்டார்கள் எனின் அவர் முகத்தில் நீ விழிக்கமாட்டாய். (இவை உன் பெருமையைக் காட்டுஞ் செயல்கள்,

(வி - ம்.) இளம்பிள்ளையைப் பச்சைப்பிள்ளை என்பது உலக வழக்கு. நரை திரை மூப்புப் பிணி சாக்காடு இன்றிப் பல்லாண்டு இளமையாக வாழ விரும்பியவர்கள் அதற்குரிய காயகற்பம், யோகப்பயிற்சி செய்து எஞ்ஞான்றும் இளமையாக இருப்பார்கள். நீயோ ஒன்றும் செய்யாமலே இளம்பிள்ளையாய் இருக்கின்றாய் என்று வியப்பாகக் கூறியது இது

மாலினைப்போல என்பதற்கு, மால் மகிதலத்தோர் வாட்டம் அறப் பாலனத்தாலே பசிதீர்ப்பார்-மால் பூமியில் உள்ளோர் வாட்டம் நீங்கும்படி காத்தல் எனும் தொழிலாலே பசியை நீக்குவார் என்றும், பால் அனத்தாலே பசிதீர்ப்பாய், பாலும் சோறும் ஆகிய உணவினால் உன் பசியை நீக்குவாய் நீ என்றும சொல் ஒப்புக் காண்க.

பூசை என்பது பூனைக்குப் பெயர். கடவுட் பூசனையையும் உணர்த்தும் இது. மேற்குலத்தாராயினும் நட்பினராயினும் நின்மேற் பூனையை ஏவிவிட்டார் என்றால் அவர்கள் முகத்தில் விழிக்காமல் அவர்களை வெறுப்பாய், அவர்களே உனக்குப் பகைவர் என்பது. நடந்துவரும் பூசனையை மறந்துவிட்டவர் யாராயினும் அவர்கள் முகத்தில் நீ விழிக்கமாட்டாய் இஃது உன் மேலாய பண்பு என மற்றும் ஒரு வெளிப்பொருள் தோன்றுதல் காண்க.

**20—25: வெட்டும் இரு வாளைய்.......சிவப்புண்டானதோ**

(சொ - ள்.) வெட்டுதற்குரிய இரண்டு வாளாயுதம் போன்ற கண்களையுடைய பெண்கள் வளர்க்க வளர்கின்றாய். நீ, வில்லையுடைய வேடனை வரக்கண்டாற் பறந்து ஓடிவிடுவாய், இன்னும் கேட்பாயாக. சிவப்பும் பச்சையும் ஆகிய இரண்டு வடிவமும் கொண்டமையால் எங்கட்குத் தெய்வமாகிய பெரிய திருவடிகள் பெருமையையெல்லாம் நீ பெற்றிருக்கின்றாய். குருவாகித் தியானஞ் செய்யும் குருமார்களுக்கெல்லாம் திருவரங்கர் பெயரை மந்திரமாக எப்போதும் கூறுகின்றாய். மாணிக்கொம்புபோன்ற கொங்கையுடைய மங்கையர் மனமகிழ்ச்சி யடைய அவர் சிவந்த உதட்டில்

ஆடவர் முத்தம் கொடுப்பதுபோல நீயும் முத்தங் கொடுப்பதற்கு முகம் சிறிதும் கோணுமலிருப்பாய். சாடோறும் அம் மங்கையர் சிவந்த இதழ்கள் உன்மூக்குப் பட்டுப்பட்டுச் சிவந்ததோ? உன் மூக்கில் அவர்களுடைய இதழ் ஒட்டி ஒட்டிச் சிவந்த நிறம் உண்டாயிற்ருே? (அது தான் எனக்குத் தோன்றவில்லை.)

(வி - டு.) வில்லாளனை யுறக்கண்டால் என மாற்றிப் பொருள் காண்க. உறவில்லாளனைக் கண்டால் - பகைவனைக் கண்டால் என மற்றும் ஒருபொருள் தோன்றுவதும் காண்க. பெரிய திருவடிகள் என்பது கருடனையுணர்த்தும். சிறிய திருவடிகள் என்பது ஆதிசேடனை யுணர்த்தும். இது வைணவ மதத்திற்குரிய தனிவிதி. கருடனுக்குக் கழுத்தில் வெண்மையும் உடம்பிற் சிவப்பும் இருப்பதுபோலக் கிளிக்கும் கழுத்திற் சிவப்பும் உடம்பிற் பசுமையும் இருப்பதனுல் அக் கருடன் பெருமையெல்லாம் உனக்குப் பொருந்தும் என்பது கருத்து. வளைந்த மூக்கும் வடிவின் சாயலும் கருடன்போலவே தோன்றுவதால் "வீறெல்லாம் சேர்வாய்" என்ருர். இபம் என்பதற்கு யானையின் மத்தகம் என்று பொருள் கூறலாம், கொங்கைக்குவமையாகக் கூறப்படும் பொருளாதலால். இபம் - யானை. அது தன் உறுப்புகளில் ஒன்ருகிய கொம்பு, மத்தகம் இவற்றை யுணர்த்தலால் பொருளாகு பெயர் எனக் கொள்க.

### 25—29: செவ்வி இழந்து......வந்தவிதம் எந்தவிதம்

(சொ - வ்.) அழகு கெட்டுத் தேவர்கட்குந் தோன்ருதவனுகிய வலிமையுள்ள மன்மதன் என்பவனை நீ பற்றிக் கொண்டு இழுத்து வந்தால் உனக்கு அதனுற் குறைவுண்டாகுமோ? (ஆகாது.) உண்டு அதனை அடக்கித் தமது ஆயுளை நீட்டி வாழ்வதற்கு அருமையான முனிவர் பூரகம் கும்பகஞ் செய்கின்ற வாயுவை நீ உன் பின்னே வரும்படி செய்கின்ருய். ஒளி விளங்கும் மையணிந்த வேல்போன்ற விழியுடைய திருமகளும் பார்வதியும் கையிற் பிடித்துக் கொள்ள நீ அவர்களை நடபுக்கொண்டாய். மெய்யிற் பிடித்திருக்கிற பச்சைநிறம், திருமாலுக்கும் பார்வதிக்கும் உனக்கும் யாவரும் விரும்பும்படி வந்தது எந்தவிதமென்று எனக்குத் தோன்றவில்லை.

(வி - ம்.) கிளி மன்மதனுக்குக் குதிரையாதலால் அதனை "நீ கொண்டு இழுத்தால்" என்றார். தேவர்கட்கும் தோற்று தவன் அடல் வேள்: அவனை இழுப்பதில் உனக்கு உயர்வே யன்றிக் குறைவில்லை என்பது தோன்ற "குறையுண்டோ" என்றார். நீண்டநாள் வாழ்வது குறித்து முனிவர் வாயுவை உண்டும் உள்ளே யடக்கியும் இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்று கூறும் பயிற்சி புரிந்தும் கும்பகம் பூரகம் செய்தும் வருகின்றனர். அத்துணைப் பெருமையுடைய வாயுவை நீ உன் பின்னே வரச் செய்கின்றாய் என்று கிளிக்குப் பெருமை கூறினர். மன்மதனுக்குத் தேர் தென்றற்காற்று. அத் தேரிற் பூட்டப் படும் குதிரை கிளி. குதிரை முன் செல்லத் தேர் பின்னே செல்வது இயற்கையாதலால் "வாயுவை உன்பின்னே வர வழைப்பாய்" என்றார். பூரகம் - வாயுவை உள்ளே நிரப்புதல்-கும்பகம் - நிரப்பி வைத்திருப்பது. தேயசு - ஒளி. மலர்மாது-பூவில் வசிக்கும் பெண்; இது திருமகளை யுணர்த்தியது. வங்கணம் - நட்பு. சிறந்த தெய்வப் பெண்களாகிய மலர் மாதும் சங்கரியும் கைப்பிடிக்கும் தோழமைபூண்டாய் நீ; அன்றி யும் அச்சுதற்கும் பார்ப்பதிக்கும் உள்ள பச்சை நிறமும் உனக்குப் பொருந்தியது எனப் பெருமை கூறியபடி இது.

### 29—32: மெச்சும் குருகே.......பேசாய்

(செ - ள்.) உன் நாக்குக் குறுகியிருப்பதற்குக் காரணம் அரி கீர்த்தனம் பாடியதாலல்லவோ? பெண்கள் எழுந்தவுடன் கையைப் பார்த்துப் பின் முகத்தைப் பார் என்று கூறுவது உன் மூக்குப் போலிருக்கும் விரல்நகங்களை முதலிற் பார்க்க வேண்டும் என்ற கருத்தினால்தான், புகழ் பெற்ற செயலிலே ஆய்ந்தால் கிள்ளை யடையாத பெரிய தனம் வீண் அல்லவோ? நீ சொல்வாய்.

(வி - ம்.) கூழை, குறுகியது. அரி-திருமால். கீர்த்தனம்-இசை யோடு பாடும் பாட்டு. பெண்கள் எழுந்தவுடன் கைவிரலைப் பார்த்துப் பின் கண்ணாடியால் முகத்தைப் பார்க்கவேண்டும் என்பது பண்டைக்கால முறை. அதற்குக் காரணம் கூறுவார் போன்று உன் மூக்குக்கு உவமையாகும் விரலைப் பார்க்கின்றனர் எனச் சிறப்புக் காட்டினர். கீர்த்தி - புகழ். கிரியை - செயல். கிள்ளை என்பது கிளியின் பெயர். கிளியில்லாத பெருஞ் செல்வம் பயனற்றது அல்லவோ? அதனாலன்றோ செல்வர் கிளிகளை வைத்து வளர்க்கின்றனர் என்று பொருள் கொள்க. கிளை என்பது கிள்ளையெனச் செய்யுளில் விரித்தல் விகாரமாக வந்தது எனக்கொண்டு சுற்றத்தார் சேராத பெரிய செல்வம் வீணானது

என்றும், மின் என்ற முதனிலை ஐயுருபு ஏற்றுநின்றதெனக் கொண்டு மின்னுதலைச் சேராத பெரிய கொங்கை பயனற்றது எனவும், வெளிப்பொருள் இருவகையாகக் கொள்க. தனம்- செல்வம், கொங்கை. "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்பதும், "கொழுநர் கைந்நகயேவு குறியை முன் செல்வ மில்லாத அவர்பெற்ற நிதிபோல்" என்பதும் காண்க.

32—35: தெரியுங்கால் தேறுகனி...வாயுண்டோ

(சொ - ள்.) ஆராய்ந்தால் தெளிவாகிய பழங்கள் நீ விரும்பாவிடில் காவில் உள்ள தேனைச் சிந்துகின்ற சக்கை யாக விரிந்து வீணாகும். நீ விரும்பினால் அப் பழங்கள் பெருமை பெறும். சொல்லத் தொடங்கினால் அன்னம் உன்னுடைய உணவல்லவா? செழித்த குயிற்பறவையும் மன்மதனுடைய சின்னத்தின் உருவமானதல்லவா? ஊது வதற்குள் பறந்துபோய்விடும் அது (இவற்றினிடத்தில் என் குறையைச் சொல்வது) என்ன பயன் தரும்; பழைமை யான வண்டுக் கூட்டமும் முடிச்சு அவிழ்க்கும் இயல் புடையன; என்றாலும் மதுவையுண்ட பின்பு வாய் திறப் பதும் உண்டோ? (இல்லையே!)

(வி - ம்.) கா - சோலை. வேரி - தேன். சிந்து கோது ஆ- சிந்துகின்ற சக்கையாக. கன்னி காவேரி சிந்து கோதாவிரியும் நீ விரும்பினால் வீறுபெறும் என வெளிப்பொருள் ஒன்று தோன்றல் காண்க. அன்னம் உனனுடைய உணவுப் பொருள். குயில் சின்னவடிவு; ஊதினால் பறந்துபோம் தன்மையது. வண்டுகள் அரும்பை விரியும்படி செய்யும். அதுவரையும் ஒலிக் கும். தேன் உண்டால் மயங்கிக்கிடக்கும். முடிச்சு என்பது அரும்பை. அவிழ்க்கும் - விரிக்கும். முடிச்சை அவிழ்க்கும் வலிமையுடையதாயினும் பேசுந் திறமில்லை என வெளிப்பொருள் பிறவற்றிலுங்கொள்க.

35—38: எதிரும் கரும்பு உரு வார்த்தை...தெளித்தாயோ

(சொ - ள்.) நேர் வருகின்ற கருமையான புருவின் குரல் கேட்டால் கசப்பு என்று சொல்லவரும்; அத்தகைய புருவுக்கும் ஒரு வாய்ச்சொற் பேசுவதற்கு இடமுண்டோ? (இல்லையே) யாவரும் விரும்புகின்ற மயில் பொருந்தும் பிணிமுகம் என்ற பெயருடையது; உன் போலச் சுகவடிவம்

கொண்ட பறவையொன்று உண்டோ? கற்று அறிந்த கல்வியும் பிறர்சொல்லக் கேட்ட கேள்வியும் நீ பெற்றிருக்கின்றாய். அக் கல்வி கேள்வியாகிய செல்வத்திற் சிறிது நாகணவாய்ப் பறவைக்கு அள்ளித் தெளித்தாய் போலும். (அதனால் அதுவும் பேசுகிறது).

(வி - ம்.) கரும்பு உருவார்த்தை-கரும்பின் சுவை பொருந்தாத மொழி என்பது வேறு வெளிப்பொருள். பிணி முகமே என்பது நோயைத் தன்னிடத்தே கொண்டது என்பது வேறு வெளிப்பொருள். சாரிகை - நாகணவாய். இது சிறிது குழறிப் பேசுகின்றது என்பது தோன்ற, "உன் செல்வமதி லள்ளித் தெளித்தாயோ?" என்றார். ஒவ்வொன்றுக்கும் குறைபாடு இருப்பதால் இவை அத்தனையும் தூது சொல்லத்தக்கனவல்ல என்பது கருத்து.

38—44: சொல்வேதம் மேன்பரி...பேதம் ஈதே

(சொ - ள்.) சொல்லுகின்றவேதம் என்னும் மெல்லிய குதிரை நான்குக்கும் பிரமன் சாரதியானன். விற்பிடித்த காமனுடைய குதிரையே (கிளியே) உனக்குச் சாரதி யார்? (ஒருவரும் இலரே) வலிய போரிற் சென்று பொருந்திய சிவன் நெற்றிக்கண் நெருப்பால் காமனுடல் கருகி அவன் வில் நாணியும் (வண்டும்) கருகி அவன் சின்னமாகிய கூவுஞ் செய்ய குயிற் பறவையும் கருகிப் பாவம்போல நின்று கறுப்பு நிறமாகிய மறுவடைந்து வந்தபோது நீ தானே நடுப்படையிற் சென்று மறுப்படாதே வந்தாய். எப்போதும் மாமரத்திற் காய்த்த பழமென்றால் இனிமையாக நுகர்வாய்; அதனையல்லாமற் காய் பூ என்றால் அவற்றை உன் நாக்காலும் மூக்காலும் கோதி யறுத்துக் கீழே யுதிர்ப்பாய்: அவற்றின் முகத்தைப் பாராய். செல்வம் நீங்காமல் நல்ல கரிய மேன்மையான தினையையீன்ற கதிர் அறுத்த தினைத் தாளை விட்டு நீங்காய்; எனக்குள்ள இரண்டு கைகள் உனக்கில்லை; உனக்குள்ள சிறகுகள் இரண்டும் எனக்கும் இல்லை; நம்மிருவர்க்குமுள்ள வேறுபாடு இதுவே.

(வி - ம்.) சிவபெருமான் திரிபுரத்தின்மேற் போருக்கெழுந்தபோது பூமி, தேர், சூரியன்சந்திரன் சக்கரங்கள், வேதம் நான்கும் குதிரைகள், பிரமன் தேர்ப்பாகன், இமயமலை, வில்,

வாசுகி என்ற பாம்பு நாண், திருமால் அம்பு, அதன்கூர்மை தீ என இங்ஙனம் ஆக்கிக்கொண்டார் என்பது புராண மரபு. அதனால் வேதமாகிய குதிரைக்குப் பிரமன் சாரதி என்றார். காமன் நிறம் கருமை. வண்டின் நிறம் கருமை, குயிலின் நிறம் கருமை. ஆதலால், தீப்பட்டுக் கருகினவாகக் கற்பித்தார். கிளி பசுமையாக இருந்தவாற் சூடுபடாமல் வந்ததாகக் கூறினர். (மாக் காய்க்குங் கனியல்லாற் காய் பூ என்றால் நாக்கு மூக்கும் அறுப் பாய் என்பதற்கு மாவிற் பழுத்த பழமென்று சொல்லாமற் காய் பூ என்று யாரேனும் கூறினால் அவர்களுடைய நாக்கையும் மூக்கை யுப் அறுத்துவிடுவாய் என மற்றுமொரு பொருள் தோன்று தல் காண்க.) ஆக்கம்.........அகலாய் என்பதற்கும் செல்வம் நீங்காமல் நன்மையாகிய வரத்தைக் கொடுக்கும் திருமால் அடியை விட்டு நீ நீங்காமலிருக்கிறாய் எனவும் சிலேடை யமைந்துள்ளதையுங் காண்க.

## 44—47 : மனைக்குள் இதமாய்...பேறுண்டோ

(செ - ள்.) வீட்டினுள்ளே வாழும் மனிதர்களுடன் நன்றாகப் பழகுவாய்; அன்புடனே அண்ணன் அக்காள் என்ற முறைகூறி எவரையும் அழைப்பாய்; ('கள்ளையுண்டு வண்டுப்பிள்ளை வாய் குழறிப் பேசும். மாமரத்திலேறிச் செருக்குள்ள பிள்ளையாம் அழகியகுயிற் பறவையும் கத்தும். கிளிப்பிள்ளை நாம் சொன்ன சொல்லைத் தவறாமற் சொல்லும்' என்று மனிதர்கள் சொல்லும்படி நல்ல பெயர் பெற்றாய்;) இனி அதனைப்போல வேறும் ஒரு பேறு உள்ளதோ? (இல்லை).

(வி - ம்.) அளிப்பிள்ளை, களிப்பிள்ளை, கிளிப்பிள்ளை என மூன்று பிள்ளைகளை எடுத்துக் கூறிக் கிளிப்பிள்ளைக்குச் சிறப்பை எடுத்துக் காட்டினர். அளி - வண்டு. களி - செருக்கு. அளிப் பிள்ளை மதுவுண்டு மயங்கிவாய் குழறும். (பூங்குயிற் களிப்பிள்ளை மரத்திலேறிச் செருக்கினாற் கண்டபடி கத்தும். கிளிப்பிள்ளை மக்கள் சொன்னதையே சொல்லும் என்பார்; ஆதலால், நீயே சிறந்தாய் என்றபடி. ஆரம்பம் - மாமரம். அதை என்பது அத்தை என விரிந்து நின்றது.)

## 47—50: அன்னம் இன்றிப் பால்குடிக்கும்...இயம்பாய்

(செ - ள்.) சோறுண்ணாமலே பாலைக் குடிக்கின்ற பச்சைக்குழந்தையாய் நீ இருந்தாலும் உன்னுடைய காலைப்

பிடிப்பார் கோடிபேர் உளர் என்று நீ கண்டாயல்லவோ? மயக்கம் பிடித்த மங்கையர், கையில்வில்லேந்திய மன்மதனால் வருந்தும் காதல் நோயைத் தீர்ப்பதற்காகவோ பச்சையிலை போன்ற வடிவத்தைப் பெற்றிருக்கின்றாய்? அஞ்சுகின்ற நெஞ்சமுடைய அப் பெண்கள் காமமாகிய காட்டை எரிப்பதற்கோ நீ வன்னி என்ற பெயர் பெற்றாய்? காரணத்தை விளக்கிச் சொல்வாய்.

(வி - ம்.) கிளி சோறிருந்தாலும் அதனை விடுத்துப் பாலைக் குடிப்பதில் விருப்பமுடையது ஆதலால், "அன்னமின்றிப் பால் குடிக்கும் பச்சைக் குழந்தை" என்றார். மக்கள் மூப்புப் பருவமடைந்து பெருந்தவமும் பிறவும் உடைய பெரியவரைக் கண்டால் காலைப்பிடித்து வணங்குவது இயல்பு. குழந்தையாயிருந்தும் கோடிபேர் உன் காலைப் பிடிப்பார்கள் என்றால் உன் பெருமையைக் கூறுவது எப்படி முடியும்? எனச் சிறப்புத்தோன்றுவது காண்க. பச்சிலை மருந்துகளால் நோய் தீர்வது போல் உன்னால் மாதர் காமநோய் நீங்கும் என்பதை விளக்கப் "பச்சிலை ரூபம் படைத்தாய்" என்றார். வன்னி - கிளி. இது நெருப்பையும் உணர்த்தும் ஆதலால், "மால்வனஞ் சுடவோ வன்னியெனப் பேர் படைத்தாய்" என்றார். மால்-காமமயக்கம். மால் வனம் - காமம் ஆகிய காடு. காமமயக்கமுற்றகாரிகையார் தங்கரத்திற் கிளியை எடுத்துவைத்து அதனுடன் பேசி இன்பப் போது போக்கும் இயற்கையைக் குறிப்பது இது.

50—53: அனத்தை நிலவோ...சொல்வாய்?

(சொ - ள்.) அன்னப் பறவையைக் கண்டு இது நிலவோ என்று மயக்கத்தாற் கூறி வருந்தும் மகளிருடைய துன்பமாகிய யானையைக் கொல்வதற்காகவோ நீ அரி என்ற பெயர் வடிவைக் கொண்டாய்; விற்போன்ற நெற்றியுடைய மாதர்களின் மிகுந்த விரகம் என்ற கொடிய சேனையை வெல்வதற்காகவோ கிள்ளைஎன்ற பெயர் வடிவு கொண்டாய் வன்மையுடையாய்! நீ மிகவும் மனமுடைந்த காதல் மகளிர் துன்பத்தைக் கெடுக்கவோ சுகம் என்ற பெயரின் வடிவு கொண்டனை, நீ சொல்லாய்.

(வி - ம்.) காம மயக்கமுடையவர் நிலவைக் கண்டால் பயந்து நெருப்பு என அஞ்சுவர்; இரவில் அன்னப்பறவை பறந்தாலும் நிலவுதான் என்று மயக்கத்தாற் கூறுவர். இது காமங்கொண்ட மகளிர் இயல்பு என்பதை விளக்க "அன்னத்தை

லலவோ என்பார்கள்'' என்றார். அரி வடிவம் என்றது சிங்க வடிவு என்றும், அரி என்ற பெயர் என்றும் பொருள்படும். அரி என்பது கிளியின் பெயர்களுள் ஒன்று; சுகம் என்து கிளியின் பெயர்களுள் ஒன்று, ஆதலால் துன்பத்தைக் கெடுக்க நீ சுகம் என்ற பெயரைப் பெற்றாய் என்றார்.

53—56 : தகவுடைய தத்தை...சுத்தீகரிக்கலாம்

(சொ - வ்.) அறிவுடையகிளியைப் பெற்றிருப்பவர்கள் மாதோர் இடையூறும் அடையமாட்டார் என்று யாவரும் சொல்லும்படி கல்வியைப் பெற்றிருக்கின்றாய்; உன்னைப் புகழவல்லவர் ஒருவருமிலர்; இயல் இசை நாடகம் என்ற முத்தமிழ் பயின்ற புலவர்கள் பெருமைபெற்ற இரதிக்கும் கலைமகளுக்கும் உன்னை உவமானப்பொருளாகக் கூறுவர் என்னில், அவர்களுயர்ந்தவர்களா? நீ உயர்வுடையையா? உரைப்பாம். ஊரார் அறியும்படி சுடுநெய்யிற் கையை வைத்தும் நீதான் பசுமை நிறமுடையாய் (உனைப்போலப் பசுமையுடைய) வேறு பொருள்கள் இல்லையென்று கையை நீட்டித் தூய்மையாகச் சூளுற்றுச் சொல்லலாம்.

(வி - ம்.) (கிளி வளர்ப்பவர்கள் அதனோடு பேசி அதன் சொல்லைக் கேட்டு அதற்குப் பாலூட்டித் தமது முன்கையில் வைத்து இன்பப்பொழுதாக நாள் கழிப்பர்; ஆதலால், அவர்களுக்குத் துன்பம் வந்தாலும் கிளியைக் காண இன்பமாகவே தோன்றும் என்ற கருத்தால் ''தத்தை யடைந்தவரே தத்தை யடையார் என்னும் வித்தை யடைந்தாய்'' என்றார். வித்தை என்றது பேசுங் கலையை. தத்து - இடையூறு; தத்து + ஐ = தத்தை என இரண்டனுருபேற்றது இது. தத்தை - கிளி. உவமிக்கும் பொருள் உயர்வுடையது ஆதலால், மாரதியினும் பாரதியினும் நீ உயர்வுடையை என்பது கருத்து. சுடுநெய்யிற் கை வைத்து மெய் கூறுவது பண்டைக்கால மக்கள் இயல்பு. பொய்யுரைப்பார் கை வெந்துவிடும் என்பதும், உண்மையாயிற் சுடாது என்பதும் அவர் கண்ட உண்மை. இதுகுறித்து நெய்யிற் கையிட்டாலும் நீதான் பசுமை; உன்னைக்காட்டிலும் பசுமையுடையபொருள் ஒன்றுமின்று என்றுதுணிந்து கூறலாம் என்றார்.

56—59 : மேய்யின் வடிவும்...தோரணமோ

(சொ - வ்.) நின் உடம்பின் சாயலும் வளைந்த அழகிய மூக்கும் திருமால் கொடியின் மேலிருப்பவராகிய

கருடாழ்வாரின் கூறோ, நீண்ட திருமால் மூங்கிலை மறுத்து ஊதுகின்ற குழலிசையிற் பண்டைக்காலத்திற் றளிர்த்த பச்சையிலையின் நிறமோ நீ கொண்டிருக்குஞ் சிறகுகள்; அன்றியும் இருள்போலத் தோன்றும் உடலுடைய இராவணனை அக் காலத்திலழித்துப் பின் அவன் தம்பியாகிய விடணன் சென்று பழைமையான இலங்கை நகரத்திற் கட்டிய புதுமையான தோரணமோ? (நானறியேன்.)

(வி - ரை.) மாயனுக்கு ஊர்தியும் கொடியும் கருடனாதலால் "கொடியிலிருப்பவர்" எனவே கருடாழ்வாரை யுணர்த்திற்று. "தங்கூறோ" என்பது அவரது வடிவின் சாயல்தான் அப்படியே யமைந்துள்ளதோ எனப் பொருள் தந்தது. கூறு - பங்கு. கண்ணன் நிரை மேய்த்தபொழுது அவற்றைக் கூட்டுவதற்காக ஊதும் வேய்ங்குழலோசை கேட்டுப் பட்ட மரங்களும் தழைத்துப் பச்சென்றிருந்தன எனப் பாகவதத்திற் கூறப்பட்டது குறித்துப் "பண்டு தழைத்த பசுந்தழையோ கொண்ட சிறகு" என்றார். தொல்லிலங்கையை விடணன் போய் அரசாளப் புகுந்தபோது புதுக்கிப் பசிய புதுத்தோரணங்கள் கட்டினான் என்று இராமாயணத்திற் கூறுவதைக் கருதி "புதுத்தோரணமோ" என்றார். இவை சிறப்புற்ற பொருள்கள் ஆதலால் உவமைகளாக எடுத்துக் காட்டப்பட்டன.

### 59—62: நல்வாய் மழலை மொழிதான்...பொன் ஒத்தாய்

(சொ - ள்.) நின்னது நல்ல வாயின் மழலைச் சொல்லானது நீலமணிபோன்ற நிறமுள்ள கண்ணன் சிவந்த கையில் வைத்திருக்கும் வேய்ங்குழலின் இசையோ? சொல்வாய் அழகிய கிளிப்பிள்ளையே! தெளிந்த அமுதம் போன்ற கிள்ளையே! நறுங்கூட்டுப் பொருள்களுடன் குளிக்கின்ற பிள்ளையே! இன்பச் சுவைக்குரிய குஞ்சே! காற்று என்ற பிள்ளையைத் தாய்போல எடுத்துச் சஞ்சரிக்கின்ற செல்வ நிறைவுடையாய்! நப்பின்னையாகிய தாயின் முன் கையில் தங்கும் பெண்ணாகிய தத்தையே! பொன்னை நிகர்த்த அழகுடையாய்!

(வி - ரை.) கண்ணன் குழலிசையை யாவரும் விரும்புவது போலக் கிளியின் மழலை மொழியைக் கேட்க எவரும் விரும்புவதால் "குழலினிசைதானோ கூறாய்" என்றார். கிளிப்பிள்ளையைக் கூட்டிலிருந்து எடுத்து நறுநாற்றமுள்ள பொருள்களை உடம்பிற்

பூசி மங்கையர் குளிப்பாட்டுவதால் ''நலங்குக் கிளிப்பிள்ளாய்'' என்றார். குளிப்புள்ளாய் என்ற பாடத்திற்கு நல்ல கூட்டுப் பொருள்களுடன் நீராடுதல் உடையாய் எனப் பொருள் கொள்க. வளி - காற்று. மன்மதனுக்குத் தென்றற் காற்றுத் தேர் ஆதலால், அதனை இழுத்துச் செல்லும் புரவி கிளி என்பது தோன்ற, ''வளிப்பிள்ளை தன்னை......சம்பத்தாய்'' என்றார். சம்பத்து - நிறைவு. எங்கும் நிறையும் காற்றை நீ எடுத்துச் செல்வதாற் பெருஞ்செல்வமுடையை எனப் பெருமை தோன்ற நின்றது அது. பின்னை - திருமகள். இது நப்பின்னையையும் குறிக்கும். தத்தை - கிளி; இது தத்தாய் என ஐ ஆய் ஆகி விளியாயிற்று.

## 63—65: முத்திநகர்...பாவாய்

(சொ - ள்.) முத்தி தரும் நகர்களுள் ஒன்றின் பெயருடையாய்! இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழ்க்குரிய எழுத்துகளுள் வல்லின வெழுத்து ஆறில் ஒன்றாகிப் பொருந்திய தகரவரியமைந்த பெயருடையாய்! தூய்மையாகிய ஐந்து பூதங்களுள் ஒன்றின் பெயருடையாய் அரசர்க்காகிய படை நான்கனுள் ஒன்றின் பெயருடையாய்! முதலிற்றோன்றிய முதற்பொருள்களாகிய மூவருள் ஒருவன் பெயருடையாய்! மக்களடையும் இரண்டு பயன்களுள் ஒன்றின் பெயருடையாய்! கண்ணிமைபோல நான் காக்கும் பொருளே! எனக்குக் கண் போன்றாய்! என் பக்குவமான கண்ணிலுறையும் கண்மணி போன்றாய்!

(வி - ம்.) முத்தி தரும் நகரங்கள் ஏழ. அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பன. அவந்திகை என்பது கிளியின் பெயர். தகரவரியமைந்த பெயர் தத்தை. இது கிளிக்குப் பெயர் எனக் காண்க. நிலம், நீர், தீ, காற்று, வானம் என்பன ஐந்து பூதங்கள். இவற்றுள் ஒன்று தீ எனக் கொள்க. தீக்கு வன்னி என்பது மற்றொரு பெயர். அதுவே கிளிக்கும் பெயராயமைந்தது. யானை தேர் குதிரை காலாள் என்பன நான்கு படைகள். இவற்றுள் ஒன்றாகிய குதிரையின் பெயர் கிள்ளை: அதுவே கிளிக்கும் பெயராயிருப்பது. அரன் திருமால் அயன் என்பன மூன்று தேவர்கள் பெயர். இவர்களுள் ஒருவனாகிய திருமாலின் பெயர் அரி. அதுவே கிளிக்கும் பெயராயிற்று. இருபயன் சுகம் துக்கம் என்பன. அவற்றுள் ஒன்று சுகம்; அதுவே கிளியின் பெயராயுள்ளது. ஆதலால் ஏழில் ஒன்றே!......பயனில் ஒன்றே? என விளித்தார்.

V.V.I

இதுகாறும் கிளியின் பெருமை கூறி அதனை முன்னிலைப்படுத்தினாள் தலைவியெனக் காண்க.

### 65—66 : ஒரு நாரில் ஏற்றும்...சொல்லக்கேள்

(சொ - ள்.) நான் ஒப்பற்ற அன்பினால் அடியார்கள் தம்மிடத்திற்கு ஏற்றுகின்ற திருமால் ஆகிய தெய்வத்தைக் காணச் சென்று ஊரார் எல்லாரும் தூற்றும்படி பழிச் சொல்லைக் கொண்ட வரலாற்றைநான் சொல்ல நீ கேட்பாய்;

(வி - ம்.) ஒரு நாரில் கட்டிய சிறந்த பூமாலையைப் பெற வேண்டுமென்று சென்று ஊருக்குள் எல்லாவிடங்களிலும் தூவிக் கிடந்த மலரைப் பெற்றுவந்த கதை என வெளிப் பொருள் ஒன்று தோன்றுவது காண்க. வெளிப்பொருள் ஒன்று தோன்றுமாறு கவிகளை அமைப்பதே இந்நூலாசிரியர் இயற்கை என்பதைப் பலவிடங்களில் நுனித்துணர்க.

## அழகர் மாண்பு

### 66—71: தோற்றி அரிவடிவம்...நீங்காத பெற்றியான்

(சொ - ள்.) முன் சிங்கத்தின் உருவமும், பின் மனித உருவமும் ஆகத் தோன்றும்படி பெரியதொரு தூணிற் பிறந்து, கரிய மலைபோன்ற அகன்றதோளுடைய இரணியன் என்ற அசுரனது வலிய உடம்பைக் கூட்டிப் பிடித்துத் தரையிற்றேய்த்து, அவன் தந்த சேனைகளையுங் கொன்று, உருத்திர (சிவன்) னாகி அவன் செய்யுந் தொழிலாகிய அழித்தற்றொழிலைச் செய்து, அவனுடன் பகைமையாகி, நிலங் காக்குந் தொழிலையும் பூண்டு, உண்ணுகின்ற பூமி முழுவதையும் உண்டு, வெண்ணெயுடன் பூதகி என்னும் பேய் கொடுத்த பாலும் போதாமல், பின்னும் பசித்துப் பிரமனைப் பெற்று, வெளியெங்கும் நிறைந்துநின்று, மருதமரத்தைச் சாய்க்கும்படி உரலுடன் கட்டப்பட்டு நடந்து தவழ்ந்து விளையாடும் பிள்ளைத்தன்மை நீங்காத இயல்புடையவன்.

(வி - ம்.) அரி - சிங்கம்; திருமாலுக்கும் பெயர், பின்+நரன்=பின்+அரன்=பின்னரன்; நரன் - மனிதன். அரன் - சிவன். அரி வடிவுமாகி அரன் வடிவுமாகி என்று மற்றொரு பொருள் காண்க. பிறந்த, காயங் கூட்டி அரைத்திடுஞ் சேனை

அருந்தி உருவம் உறுதியுடையதாகிச் செய்யுந்தொழில்கள் மாறுபட்டு மண்ணைக் குழைத்திட்ட பொட்டணிந்து உண்ணும் உணவுகளெல்லாம் உண்டு வெண்ணெயுடன் தாய் தந்த பால் போதாமல் துன்பமடைந்து வெளியில் நின்று பரவிய தவத்தை நீங்கிய ஒழுக்கம் கொண்டு தவழ்ந்து விளையாடும் பிள்ளைத் தன்மையென வெளிப்பொருள் ஒன்று தோன்றுதல் காண்க. இப் பொருட்கு, வன்காயம் - வலிய பெருங்காயம் முதலிய மருந்துகள். சேநெய் பிள்ளைகட்கு முதலிற் கொடுப்பது; அது விளக்கெண்ணெய் பால் முதலியன கலந்தது. உரு - வடிவம். திரன் - உறுதி. விலக்காப்பு - மண்ணைக் குழைத்துத் திலகம் இடுவது. இது கண்ணேறு படாமல் வளர்வது குறித்திடுவது. பூதம்+அதனை=பூதனை என மகரங்கெட்டு அகரங் குறைந்து நின்றதாகக் கொள்க. பூதம் - தோற்றமாகிய; அனை - தாய். வேதனை - துன்பம்; பா - பரவிய; தவத்தை - நற்பண்புகளை; தன்னும் - நீங்கிய; நடை - ஒழுக்கம்; இட்டு - கொண்டு என இவ்வகையாகச் சொற்பிரித்துப் பொருள் காண்க.

71—74: ஒள் இழையார் கோல்லைப்...விட்டினன்

(சொ - ள்.) மங்கையர்கள் கொல்லையில் வளர்ந்த பனைமரத்தைக் குதிரையாக்கி மடலேறுவதற்குத் தக்க அழகு வாய்ந்த சிறந்த புயங்களையுடையவன்; கருங்கல்லை முன் அகலிகை என்ற பெண்ணாக்கிய மலர்போன்ற பாதங்களை யுடையவன்; சொல்லிய கவியின் பொருட்டுப் பாம்பாகிய பாய்ச்சுருட்டுப் பாரத்தைத் தாங்கிய முதுகை யுடையவன்; வானவர்கள் பொருட்டு அருமையான அமுதங் கடைந்த அழகிய கைகளையுடையவன்; சீதையாகிய பெண்ணுடன் கொடிய கானகத்தைக் கடந்து சென்ற வருத்தமுடையவன்; ஒரு வேடனுக்கு மெல்லிய தன் கால் நகங்களைத் தந்த விடுதலை யுடையவன்.

(வி - ம்.) ஒள் இழையார் - ஒளிபொருந்திய நகையைப் புனைந்தவர் (மங்கையர்). கொல்லை - புறக்கடை; கோட்டமும் ஆம். பெண்ணை - பனை. பனைமடலைக் குதிரையாக்கி ஊர்ந்து வருவதற்கு ஏதுவாகிய திருப்புயம் என்க. திருப்புயத்தின் அழகு கண்ட மங்கையர் அனைவரும் மடலேறியேனும் அவனை யணையவேண்டும் என்று கருதுவர் என்பது கருத்து. திருமால் அயோத்தியில் இராமனாகப் பிறந்து வளர்ந்து கோசிகமுனிவருடன் மிதிலைக்குச் செல்லும்போது வழியிற் கருங்கல்லாய்க்

கிடந்த அகலிகைமேற் கால் பட்டபோது சாபம் நீங்கிப் பெண்ணாகி வந்தாள் என்ற வரலாற்றை யுட்கொண்டு "கல்லைப்பெண்ணாக்குமலர்க் காலினன்" என்றார்.

பன்னிரண்டு ஆழ்வார்களுள் திருமழிசையாழ்வார் என்பவர் ஒருவர். அவர் திருமால் அன்பிற் சிறந்தவராதலிற் சில அற்புதச் செயல்கள் அவர்பாலனிகழ்ந்தன. தெய்வப்பணிபுரிந்த ஒரு கிழவியைக் குமரியாக்கினார். அதனைக் கேள்வியுற்ற அந்நகர் மன்னன் ஆகிய பல்லவராயன், ஆழ்வார்க்கு மாணவராகிய கணிகண்ணன் என்பவரை யழைத்து, "என்னை இளமைப் பருவமுள்ளோன் ஆக்கும்படி நீர் நும் ஆசிரியரிடம் கூறல் வேண்டும்" என்று சொல்லக், கணிகண்ணன், "என்னால் அவ்வாறு ஆசிரியரிடம் கூற முடியாது" என்று மறுக்க, அதுகுறித்து நாடு கடக்கும்படி ஆணையிட்டனன். ஆணைப்படி கணிகண்ணன் நடக்கத் துணிந்து ஆசிரியரிடம் கூறி நீங்கினன். ஆசிரியர், திருமழிசையாழ்வார், காஞ்சிபுரம் கோயிலுக்குச்சென்று பெருமாளை நோக்கி "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டா—துணிவுடனே, செந்நாப் புலவனிதோ செல்கின்றே னீயுமுன்றன்; பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்று பாடிச்சென்றார். அவர் சென்றவன்றே பாம்புப்படப் பாயலிற்கிடந்த பெருமாளுருவமும் மறைந்தது. மன்னன் கண்டு ஆழ்வாரிடம் சென்று வேண்டி, மீண்டும் பாடுவித்துப் பெருமாளுருவம் வரக்கண்டு மகிழ்ந்து வழிபட்டான் என்பது வரலாறு. இதனைக் கருதி, "சொல்கவிக்கு...பாயலான்" என்றார் தமிழ்க்கவிக்காகப் பாயற்பாரம் அடைந்த முதுகு உடையவன் என மாற்றுக. படப்பாயலைச் சுருட்டி முதுகில் போட்டுப் பின்னே நடந்து சென்றார் எனப் புலவர் கற்பித்தனர். குமரகுருபரரும் தாம் பாடிய பிள்ளைத்தமிழில் "பணிகொண்ட முடவுப் படப்பாய்ச்சுருட்டுப் பணைத்தோ ளெருத்தலைப்பப் பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்று திருமாலைக் குறித்ததும் காண்க. பாரம்+முதகு+அடைந்த என்றும், ஆர்+அமுது+கடைந்த என்றும் பிரித்துப் பொருள் காண்க. நாரி - பெண்; இங்கு சீதை. மால் கண்ணனாகப் பிறந்து பூமி பாரத்தை நீக்கி வைகுந்தம் பிரப்படவேண்டிய போது ஒரு நாள் காட்டில் ஒரு காலின்மேல் மற்றொரு காலை வைத்துப் படுத்திருந்தனர் என்றும், சரன் என்ற ஒரு வேடன் மான் என்று கருதிக் கால் நகங்களில் அம்பு படும்படி எய்து பின் வந்து பார்த்து வருந்தினன் என்றும், அறியாது செய்த பிழை பொறுத்து அவ்வேடனுக்கு வீட்டுலகம் கொடுத்தார் என்றும் பாகவதம் கூறும். ஆதலால், வேடன் எய்யும்படி கால் நகங்களைக் காட்டித் தந்து இவ்வுலகி

னின்றும் விடுதலை யடைந்தவன் எனக் கொள்க. தந்தவன் வீட்டையுந் தந்தவன் எனக் கூட்டியும் பொருள் கொள்க. வன்+கானகம்+கடந்த மென்+கால்+நகங்கள்+தந்த எனப் பிரிக்க.

74—77 : என்காதல் வெள்ளத்து...காண்பிப்போன்

(சொ - ள்.) எனது காதற்கடலில் அமிழ்ந்திக் கிடப் பவன்; கடலின்மேல் மிதந்து வருபவன்; ஒவ்வொருவர் மனத்திலும் இருப்பவன்; இவ்வுலகத்திற்கு அப்பாலும் இருப்பவன்; தெளிவாக வெட்டவெறு வெளியிடத்திலே னின்றாலும் ஒருவருக்கும் தோன்றாதவன்; அருகில் இருந் தாலும் அடையமுடியாதவன்; நீங்காமல் என எண்ணத் திலே மாயன் என்ற பெயர்க்காரணம் தோன்றும்படி மறைந் திருப்பவன்; கண்ணன் என்ற பெயர்க்காரணம் தோன்றும் படி என் கண்களிலிருந்து எப்பொருளையுங் காட்டவல்லவன்.

(வி - ம்) என் காதற்கடலில் என்னால் அமிழ்த்தப்பட் டிருக்கிறான்; அக் கடலினின்றும் அவன் கரையேறவியலாது நான் அவனைப் பற்றியிருக்கிறேன் என்ற கருத்துச் தோன்ற "என் காதல்.........அமிழ்ந்திறேன்" என்றாள். உப்பால் - அப்பால். உப்பாலான் என்றது உலகத்தையுங் கடந்து அப்பாலும் இருப் பவன் என்பதை யுணர்த்திற்று. மாயன் - மாயம் உடையவன். மாயம் – பொய். பெயருக் கேற்றவாறு மறைந்திருப்பவன் என்பது. கண்ணன் - கண்ணாகவிருப்பவன் ; எல்லாப் பொருள் களையும் விளக்கிக் காட்டவல்லான் என்பது.

77—80 : எண்ணுங்கால் எங்கும்... இருத்துவோன்

(சொ - ள்.) ஆராய்ந்து நோக்கும்போது எங்கும் இலன் என்று எவரும் கூறும்படி இருந்து எங்கும் நிறைந்து இருப்பவன்; எங்கும் நிறைந்து இருப்பவனாக அறிஞர்களுக் குத்தோன்றும்படி இருந்தே அறிவியலார்க்குத் தோன்றாமல் எங்குமில்லாதவனாய் மறைபவன், அங்கே அவனுக்குத் தோன்றும் என்னை எனக்குத தெரியாமல் மறைத்து நான் எப்போதும் காணமுடியாத தன்னை எனக்குக் காட்டும் கடவுள், முற்பிறப்பில் நான் புரிந்த இருவினைகளையுங் கெடுத்து மலம் மாயைக் கூட்டங்களையும் நீக்கி என்னை எப்போதுந் தனியே இருக்கும்படி செய்ய எண்ணுவோன்.

(வி - ம்.) அறிவும் அன்பும் உடையவர் அகக்கண்ணுக்கு எங்கும் நிறைந்திருக்கும் பொருளாகத் தோன்றுவதாலும் அவை யில்லார் புறக்கண்களுக்கு எங்கும் இல்லையெனத் தெரிதலாலும் "எங்கும் நிறைந்திருப்போன்" என்றும், "எங்கும் இலாதான்" என்றும் கூறினர். 'யான்' என்னும் அகப்பற்றும், 'எனது' என்னும் புறப்பற்றும் நீங்காமல் இருக்கும்படி நீ செய்திருக் கின்றாய் என்ற கருத்தினால் 'என்னை எனக்கொளித்து" என்றும், 'இங்ஙனம் பற்று நீங்காது தன்னையறியாத எனக்கு நீ தண்ணரு ளால் உன்னைக் காட்டினை' என்பது தோன்ற "தன்னை யெனக்கு அருளும் தம்பிரான்' என்றும் கூறினர். இருவினையும் ஒழிந்து மும்மலமும் நீங்கியபோதுதான் உயிர் தனித்திருந்து இறை வனைக்காணும் இயல்பு பெறும் என்பது குறித்து, "முன்னை வினை......இருத்துவோன்" என்றார்.

80—82 : துன்று பிரமாவும்நான்....பரஞ்சோதி

(சொ - வ்.) என்னோடு நெருங்கியிருக்கும் பிரமனும் நானே; அவன் படைத்த நிலைபெற்ற பல உயிர்களும் நானே; பிரமன், உயிர் என்ற இருவரையும் ஏவிப் பணி செய்விப் போனும் நானே என்று யாவர்க்கும் அறிவித்தற்பொருட்டு முற்காலத்தில் இடையர்களிடத்திலுள்ள பசுக்களாகவும், கன்றுகளாகவும், அவற்றை; மேய்க்கும் இடையனாகவும் தோன்றிநின்ற முதன்மையான ஒளிப்பொருள்.

(வி - ம்.) திருமால் கண்ணனாகப் பிறந்து கோவலர் தலைவன் நந்தகோபன் மனையில் வளர்ந்து பசுக்கூட்டங்களை மேய்த்து வருங்காலத்தில் பிரமன் கண்ணனுக்குத் தோன்றாமல் சில பசுக்கன்றுகளையும் இடைச் சிறுவர்களையும் கவர்ந்து ஒளித்து வைத்தனன் என்பதும் அதனையறிந்த கண்ணன் தானே அப் பசுங்கன்றுகளாகவும், அவ்விடைச் சிறுவர்களாகவும், உருவங் கொண்டு இருந்தனன் என்பதும் பாகவதத்தில், மலரவன் சிறார் கன்று கவர்ந்த அத்தியாயத்தால் அறியலாம். இவ் வரலாறு கண்ணனே பிரமனாகவும், கன்றும் சிறாரும் ஆகவும் இருந்ததைக் காட்டுவது காண்க.

82—84 : மாநரகப் பேர் இருள்.... தோனிப்பிப்போன்

(சொ - வ்.) கொடிய நரகமாகிய பெரிய இருட்டைத் தொலைப்பதற்கு நீங்கள் தவஞ்செய்ய வேண்டுவதில்லை; உடம்பில் அருமையான உயிரைச் சேர்ப்பதற்குப் பிரமன்

வேண்டுவதில்லை. ஆராய்ந்து பாருங்கள் என்று மக்களுக்குக் காட்டுபவன் போலத் தன் கையில் உள்ள சங்கின் முழக்கமும், பெரிய வேய்ங்குழலின் உயர்ந்த ஒலியும் தோன்றும்படி வாயில் வைத்து ஊதிக்காட்டுவோன்.

(வி - ம்.) நகரப்பேரிருள் நீக்குவது சங்கத்தொனி என்றும், உடம்பில் உயிரைக் கூட்டுவது குழலோசை என்றும் முறையே கொள்க. பதினான்காம்நாட்போரில் கண்ணன் வாய் வைத்தூதிய சங்கொலி கேட்ட யாவரும் வைகுந்தம் புகுந்தனர் எனப்பாரதம் கூறுவதாலும், வேய்ங்குழலோசை கேட்ட பட்ட மரங்கள் எல்லாம் உயிர் பெற்றுத் தழைத்து நின்றன எனப் பாகவதம் கூறுவதாலும் இதன் உண்மையறிக.

84 — 87: பொங்கும் அலை மோதும்பரன்...உள்ளத்தான்

(சொ - ள்) பெருகும் திருப்பாற்கடலின் அலைமோதும் படி அறிதுயில் புரிவோன்: இவனே ஆதிமூலம் என்று தோன்றும்படி "ஆதிமூலமே" என்றழைத்த யானையைச் சான்றாகக் கொண்ட திருமால், பழமையான உலகங்களை யெல்லாம் படைப்பவனும் நான், அவற்றைத் துடைப்பவனும் நான் என்று சொல்லாமலே தனது சிறந்த உந்திக் கமலத்தாலும் வாயினாலும் குறிப்பாகக் காட்டுவோன், இனிய தமிழ்மொழியால் முதன்மையாகிய நான்கு வேதப்பொருளை யும் நாலாயிரஞ் செய்யுளில் அமையும்படி பாடிய ஆழ்வார் பதினொருவர் உள்ளத்திலும் அமர்ந்திருப்பவன்.

(வி - ம்.) கசேந்திரன் என்ற யானை ஒரு மடுவில் முதலையாற் கவ்வப்பட்டு வருந்தி, "ஆதிமூலமே!" என்று அழைத்த போது தோன்றிச் சக்கரத்தால் முதலையைக் கொன்று அவ் யானைக்கு வைகுந்தம் அளித்தார் என்பது பாகவத வரலாறு. அதனை யுட்கொண்டு "ஓதுங்கரியென்றுடைய மால்" என்றார். கரி - யானை; கரி - சான்று, இருபொருளும் தருமேனும் ஈண்டுச் சான்று என்ற பொருளே தகுதியுடைத்து. கரியாகிய என வருவித்துக் கொள்க. உந்தியில் தாமரைப் பூ உண்டாகி அதிற் பிரமன் தோன்றி அவன் உலகத்தைப் படைத்தான் என வைணவசமயம் கூறுவதால் உந்தியின் செயல் திருமாலே படைப்பவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது. யுகமுடிவு காலத்தில் திருமால் உலகமுழுவதையும் வாயால் உண்டு வயிற்றில் அடக்கிக் கொள்வார் எனக் கூறுவதால் வாயின்செயல், துடைப் பவனும் திருமால் என்பதைக் குறிப்பால் உணர்த்தியது காண்க.

"நாலாயிர திவ்விய பிரபந்தம்" என்பது வைணவசமயத்தார்க்கு வேதம் போன்றது. அதனைப் பாடியவர் ஆழ்வார் பதினொருவர் ஆவர். பேய், பூதம், பொய்கை, தொண்டரடிப் பொடி, மழிசை, பாண், மங்கை, வில்லிபுத்தூர், ஆண்டாள் குலசேகரன், மாறன் என்பன பெயர்கள்.

87—90: பாதம் எனும் செந்தாமரை...உணர்வித்தோன்

(சொ - ள்.) திருவடிகள் என்ற செந்தாமரைப் பூவிலிருந்து தேன் வடிவதுபோல மூற்காலத்தில் கங்கைநதி வழியும்படி செய்த வன்மையுடையவன்; எப்பொழுதும் பெரிய இவ்வுலகமானது அறிவுள்ளதும் அறிவில்லாததும் ஆகத்தோன்றும்படி உறங்கியும உறங்காமலும் அறிதுயில் கொண்டிருப்பவன்; தன்னை வளர்த்த தாயாகிய யசோதைக்கு அழகிய வாயைத் திறந்து தெளிவாகக் காட்டி உலகம் புறத்திலிருப்பதுபோலவே தன் வாய்க்குள்ளும் இருக்கிறது என்பதை யறியும்படி செய்தோன்.

(வி - ம்.) வாமனவடிவமாக மாவலிபாற் சென்று மூன்றடி மண் வேண்டிப் பெற்றுப் பூமியை இடக்காலால் ஓரடியாக அளந்து, வலக்காலைத் தூக்கி வானத்தை மற்றோரடியாக அளந்து நீண்ட உருவமாக நின்றபோது திருமாலின் வலக்கால் வழியே கங்கையாறு வழிந்திறங்கியது என்பது வரலாறு. மந்தாகினி-கங்கை கங்கையை உலகத்திற்குக் கொடுத்தல் பெருங்கொடையாதலால் அச் செயலுடையவனை "வண்மையான்" என்றார். உலகத்திலுள்ள மக்கள் உண்மையை யறியாமல் மயங்குவதற்கு அறிதுயில்தான் காரணம் என்பார் "அறியும் அறியாமையுமாய்த் தோன்ற......துயில் கொள்வோன்" என்றார். "கண்ணன் ஆயர்பாடியில் பிள்ளையாக வளரும்போது மண்ணைத் தோண்டி புண்ணக்கண்ட தாய் அசோதை அடித்து 'வாயைத் திறந்து காட்டு' என்றபோது, திறந்த வாயில் உலக முழுவதும் தோன்றக் கண்டு வியந்தாள் என்பது வரலாறு. இது குறித்து, "செகம் புறமும் உள்ளும்......உணர்வித்தோன்" என்றார். பெற்றவள் தேவகியாயினும் பிறரால் அறியாமல், ஈன்றவள் அசோதைதான் எனப் பிறர் அறியும்படி வளர்ந்ததால் ஈன்ற தாய் என்றார் அசோதையை. மணி-அழகு.

90—93: கொள்ளை கவற்சிதிரு...மணிநிறமும் ஆனேன்

(சொ - ள்.) மிகுதியான கவலையைத் தரும் பிறவியாகிய கடலிற் கலந்திருக்கும் அஞ்ஞானம் என்ற

உவர்ப்பை மாற்றுவதற்காக மேகவடிவாக விளங்குவோன், உயர்வாக மடங்கி மடங்கி வருகின்றபல்வேறு சமயங்களாகிய ஆறுகள் வந்தடங்குவதற்காகக் கருங்கடல் போன்ற வடிவு கொண்டவன்; தன்னுடம்பிற் சேர்க்கும் ஓர் ஒளியைப்போல என்னையும் தன்னுடன் சேர்த்துக் கொள்வதற்காக நீலமணி யுருவமும் ஆகியவன்.

(வி - ம்.) கடல்நீரை முகந்து உவரை நீக்கி நீராக்கிப் பொழிவது மேகத்தின் செயலாதலால் "சென்மக் கடலில்... முகிலானேன்" என்றார். பிறவியைக் கடலாகவும் அவிச்சையை உவராகவும் உருவகஞ்செய்தனர் எனக் காண்க. முகில்-முகில் வடிவம். உன்னையன்றித் தெய்வம் வேறில்லை; எத்தெய்வத்தை நினைத்துத் துதித்தாலும் அத்துதியும் நின்னையே சாரும்; நீயே பரம்பொருள் என்ற கருத்துக்கேற்ப "பரசமய நதிவந்தடங்க...ஆனேன்" என்றார். பரசமயம் என்பது வைணவத்தை விடுத்து மற்றைச் சமயங்களை யுணர்த்தும். கடற்குள் பல ஆறுகளும் வந்தடங்குவதுபோல உனக்குள் எல்லாச் சமயங்களும் அடங்கும் என்பது கருத்து. வாதம் - சொற்போர். சொற்போர்க்கு இடமாகிய பரசமய நதி என மாற்றுக. நீலநிறம், மஞ்சள் சிவப்பு முதலிய பல நிறங்களைத் தனக்குள் மறைத்துக் கொள்வதுபோல என்னை மறைப்பதற்காக நீ நீலமணி போன்ற வடிவு கொண்டாய் என்ற கருத்தினால் "எனையும்......ஆனேன்" என்றார். மணி - நீலம். கிரணம் - ஒளி.

93—96: பணைக்கும்விசைப்பூதலம்...தணித்திடுவோன்

(சொ - வ்.) பெரிய வேதத்தையுடைய பூமியாகிய ஊசலின்மேல் அமர்ந்து இருக்கின்றவனும் அவ்வூசலை யாட்டுகின்றவனும் தானொருவனேயாகிய பெரியோன், விலங்குகளைப் பிடிக்கும் வேடர்கள் பார்வை மிருகங்களைப் பொருத்திவைத்து ஒரு பார்வை மிருகத்தைக்கொண்டு நூறு விலங்குகளைப் பிடிப்பது போலப் படைக்கப்பட்ட எனது பிறவி எண்பத்து நான்கு நூறாயிரத்தையும் தனது பிறவி பத்தினால் பிடித்துக் களைந்தோன்.

(வி - ம்.) பூவுலகம் எங்கும் நிறைந்து, இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்கள் எல்லாம் கலந்து தான் வேறு, உலகம் வேறு என்று பிரிக்கமுடியாதபடி எள்ளில் எண்ணெய் பூவில் மணம்போல ஒன்றாயிருப்பவன் என்பது தோன்ற "ஊசல்மீதிருப்போனும் அசைப்போனும்தானாகும் அண்ணல்" என்றார்.

வேடர்கள் மான் முதலிய விலங்குகளைப் பிடிப்பதற்கு அவற்றைப்போல உருவஞ்செய்து வைத்திருப்பர். அது பார்வை மிருகம் எனப்படும். அன்றியும், வளர்த்துப் பழக்கியும் வைத்திருப்பர் மிருகங்களை. அவையும் பார்வை மிருகம் என்று கூறப்படும். அவற்றைக் கொண்டுபோய்க் கானகத்தில் விட்டுத் தாம் பிடிக்க நினைக்கும் மிருகத்தைப்போலக் கத்துவர். அவ்வொலி கேட்டுத் தம்மினமென்று பலவரும் அப்போது வேடர் மறைந்திருந்து அவற்றை வஞ்சகமாகப் பற்றிக்கொள்வர். இது வேடர் விலங்குகளைப் பிடிக்கும் விதம். இக்கருத்தினை யுட்கொண்டு ஒரு பார்வை மிருகத்தை வைத்து நூற்றுக்கணக்கான விலங்குகளை வேடர்கள் வளைத்துப் பிடித்துக்கொள்வதுபோல நீ பத்துப்பிறவி எடுத்து எனது பிறப்பத்தனையுந் தொலைத்தாய், உன் பார்வையால் என் பிறவி எண்பத்து நான்கு நூறாயிரமும் இல்லாமல் நீங்கின என்றார். உயிர்களில் எண்பத்துநான்கு நூறாயிரம் வேறுபாடுகள் இருக்கின்றன என நூல்கள் கூறும். மரம் கொடி செடிகளாகிய தாவர வேறுபாடு இருபது நூறாயிரம்; விலங்கு பறவைநீர் வாழ்வன பப்பத்து; மக்கள் ஒன்பது. தேவர்கள் பதினான்கு; ஊர்வன பதினொன்று என்று கணக்குக் கூறுகின்றனர். எறும்பு கடையானை தலையாக எண்பத்துநான்கு நூறாயிரம் என்ற பழமொழி நெடுங்காலமாக வழங்குகிறது. "ஊர்வன பதினொன்றாகும் ஒன்பான் மானிடர்தம் பேதம், நீரினில் விலங்கு புள்ளுப் பப்பத்தாம் நெடிய தேவர், சாரும் ஈரேழ்நாலைந்தே தாவர யோனி பேதம், ஆருமென் பானுன் கோடேயமைந்த நூறாயிரங்கள்" என்பது சூடாமணி நிகண்டு. இதன் உண்மை அதில் காண்க.

## பத்துறுப்பு

### மலை

### 96—100: முன்பு புகழ்ந்து ஏத்த...சோலைமலையினன்

(சொ - ள்.) முன் நின்று புகழ் கூறித் துதிக்கும் பிரமன் அரன் என்னும் இருவரும் நீங்காமல் இருப்பக் கேசவாத்திரி என்னும் அழகு பெற்று, இனமாகிய விரும்பத்தக்க உடலைப்பெறாதன்குரிய பிறவியாகிய விலங்குகளைக் கெடுத்தலாற் சிங்காத்திரி என்ற சிறப்புப் பெற்று எம்பெருமானாகிய திருமால் கண்ணனாக வந்தபோது மேய்த்த பசுக் கூட்டங்கள் போலச் சிறுமலைகளெல்லாம் அருகில் சூழ்ந்து நிற்க,அப் பசுக்கூட்டத்தில் ஒரு பெரிய காளைபோல

யாவரும் பார்க்கும்படி தோன்றுவதால் இனிய வாத்தியங்கள் முழங்கும் இடபகிரி என்ற பெயர் பொருந்திய சோலைமலையை யுடையவன்.

(வி - ம்.) கேசவன் - திருமால். அத்திரி - மலை, கேசவாத்திரி - திருமாலின் மலை; கேசவன் இங்குத் தெய்வமாக இருப்பதால் அவன் வீற்றிருக்கு மலை கேசவாத்திரியாயிற்று. சிங்கம் + அத்திரி = சிங்காத்திரி. இஃது அம் மலையின் சிறப்புப்பெயர். ஒரு பிறவியால் பல பிறவிகளும் வருவதால் பிறவியைக் கால் விலங்கு என்பர் அறிஞர். சிங்காத்திரியைக் கண்டவர் பிறவித்தளை நீங்கப் பெறுவர் என்பது. கோத்திரம் ஆம் வெம் காத்திரம் சேர் விலங்குகளை மாய்த்தலால் - மலையில் உண்டாகிய கொடிய முன் கால் உள்ள வனமிருகங்களை யெல்லாம் கொல்லுவதால் எனப் பொருள் கொண்டு அதனால் சிங்கத்தின் செயலுடையது எனச் சிலேடை தோன்றுதல் காண்க. இடபம் - காளை. கிரி - மலை. இவ்வுவமையால் சுற்று முள்ள மலை சிறியவையென்றும், இம் மலை பெரியதென்றும் விளங்குகிறது இடபகிரி என்ற பெயர்க் காரணம் இதுவன்று, தருமதேவதை முற்காலத்தில் இடபமாகி வந்து இம் மலையில் தவஞ்செய்து திருமாலை வழிபட்டுப் பேறு பெற்றமையே காரணம் ஆம், திருமாலுக்கு எப்போதும் பூசை நடத்துவதற்கு இசைக்கருவிகள் முழங்குவதால் ''இன்னியம் ஆர்க்கும் இடபகிரி'' என்றார். இலக்கிய மரபின்படி பாட்டுடைத் தலைவராகிய அழகர்க்குப் பத்துறுப்புகள் (தசாங்கம்) கூறத் தொடங்கி முதலில் மலைகூறினர் எனக் காண்க. அரசாள்வதற்குத் தக்க துணையாகிய பத்துப் பொருள்களைத் தசாங்கம் எனக் கூறுவர் புலவர். தசம் - பத்து, அங்கம் - உறுப்பு. அரசு என்ற உடலுக்குரிய உறுப்புகள் இவை. அவை: மலை, ஆறு, நாடு, நகர், பரி, யானை, மாலை, முரசு, கொடி, ஆணை என்பன. இவையின்றி அரசு நடவாது ஆதலின் அங்கம் எனப் பெயர்பெற்றன.

## ஆறு

### 101 – *103:* எந்நாளும்... நூபுர நதியான்

(பொ - ள்.) எஞ்ஞான்றும் பொன் மலையிலிருந்து வீழ்ந்துஒடுகின்ற சாம்பூநதம் என்ற ஆறுபோலத் திருமால் திருவடியில் அணிந்த நல்ல மாணிக்கச் சிலம்பிலிருந்து வழிந்தோடுகின்ற நதியாகிக் கற்கள் நிறைந்த மலைகளில் இடபமலை இந்திரனைப்போலத் தோன்றவும் அதிலுள்ள வளம்பொருந்திய சுனைகள் அவ்விந்திரன் மெய்ம்மேல்

உள்ள கண்களைப்போலத் தோன்றவும் பழைமையான திரு மால் தோளினும் மார்பினும் அணிந்த முத்து மாலைபோலத் தோன்றி வருகின்ற சிலம்பாறுடையவன்.

(வி - ம்.) இமயமலையில் ஓடும் கங்கை பிரமபுத்திரா முதலிய ஆறுகளில் சாம்பூநதம் என்பதும் ஒன்று. சம்பு+நதம்= சாம்பூ நதமென்றாயிற்று. இது வடமொழிப்புணர்ச்சி. சம்பு - நாவல்; நதம் - மேற்கு நோக்கிச் செல்லும் யாறு. நதி - கிழக்கு நோக்கிச் செல்வது. இது வடமொழி மரபு. இதனால் நாவற் பழச்சாற்றின் மேல் நீர் விழ்ந்து அருவியாக மேற்கு நோக்கி யோடும் யாறு சாம்பூநதம் எனப் பெயர்பெற்றது. இடபமலை யின் அடிவாரம் திருமாலின் திருவடியெனக் கொண்டு அங்குள்ள மாணிக்கமணிகளை அவரது திருவடிச் சிலம்பின் மாணிக்கமாகக் கொண்டு அவற்றின் வழியே யோடுகின்ற யாறாக அது தோன்றுகின்றது என்பது குறிப்பு. இடபமலைமேல் ஆயிரக்கணக் கான சுனைகள் இருக்கின்றன. அதனால் இந்திரன் உடம்பிலுள்ள விழிகளையொத்தன சுனைகள். இந்திரனைப் போன்றது இடபமலை. "மாயோன் மார்பின் ஆரம்போல, மணிவரை யிழிதரு மணிகிள ரருவி" (தொல். செய் 35. பேரா உரை மேற்.) என்றார் முன்னைப் புலவோரும் ஆதலின் "மார்பின் முத்தாரம் போல வரும்" என்றார். நூபுரம் - சிலம்பு. நதி - ஆறு. சிலம்பாறு என்பது இடபகிரியில் ஒரு யாறு 'சிலம்பக விழ்ந்த சிலம்பாற் றகன் றலை" (சிலப். 11 : 108) "சிலம்பிய லாறுடைய திருமாலிருஞ் சோலை" (பெரியதிரு. 9. 9 : 9) இம்மேற்கோள்கள் சிலம்பாறு பழம்பெருமையுடையது என்பதை யுணர்த்தும். இதனால் யாறு கூறப்பட்டது.

## நாடு

103—106 : சீலமுறும் பன்னிரு செந்தமிழ்...நாட்டினான்

(சொ - ள்.) நல்லொழுக்கமுள்ள செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த கொடுந்தமிழ் நாடுகள் பன்னிரண்டும் பூமகட்கு முறையே கிளைக்கும் இருகைகள், இருசெவிகள், இரு கொங்கைகள், முகம், இரு கால்கள், கூந்தல் ஆகும். அவற்றுள் இமயமலைமேல் தமது புகழை எழுதப்பட்ட சோழநாடும் பாண்டிய நாடும் இரு கண்களாம்; அவ்விரண் டில் கருணையுடைய வலக்கண் என்று சொல்லப்படுகின்ற தென்பாண்டி நாட்டினை யுடையவன்.

(வி - ம்.) செந்தமிழ் நாட்டைச்சேர்ந்த கொடுந்தமிழ் நாடுகளாவன : "தென் பாண்டி குட்டம், குடம், கற்கா, வேண், பூழி, பன்றி, அருவா, அதன் வடக்கு-நன்றாய, சீதம், மலாடு, புனனாடு செந்தமிழ்சேர், ஏதமில் பன்னிருநாட்டு எண்" என்ற செய்யுளிற் கூறப்படுவன. புனனாடு – சோழநாடு; தென்பாண்டி-பாண்டியநாடு. பின்னகம் - பின்னல். இது மயிர் முடியை யுணர்த்திற்று. கனகம் - பொன் வரை - மலை; பொன்மலை. இஃது இமயமலையை யுணர்த்திற்று. கனகவரைமீது புகழ் நீட்டும் புனனாடும் தென்னாடும் என்றது சேரன், சோழன், பாண்டியனாகிய மூவேந்தரும் தமது வில், புலி, கயல் என்ற கொடிகளைத் தீட்டியதைக் குறிக்கும். "மின்றவழும் இமய நெற்றியில் விளங்கு விற்புலி கயல்பொறித்த நாள்" என்பதும் "பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்" என்பதும் (சிலப்பதிகாரம், வாழ்த்துக். உரை, ஆய்ச்சியர் குரவை.) காண்க.

ஊர்

106—111 : பொன்னுருவாய்ச் சந்த்ர... திருப்பதியான்

(சொ - வ்.) தங்கமாகிய சந்திரன் வடிவத்தையுடைய சோமச்சந்திர விமானத்தை இந்திரவிமானமே இஃது என்றும், மந்திரத்தோடு கூடிய வெற்றிக்கொடி ஏறுகின்ற கொடிமரத்தைக் காமவல்லி படரும் கற்பகமரமே இது வென்றும், அறிவிற் சிறந்தவர்கட்கு ஒப்பற்ற வாழ்வாக வீற்றிருக்குந் திருமாலை உபேந்திரன் என்றும், உடையாழ் வாரை ஆண்ட குருவாகிய திருமாலையாண்டான் என்பவரை வியாழபகவான் என்றும், பொருந்திய புகழ்பெற்ற திருமலை நம்பி முதலிய கோயிற் பணியாளர்களைத் தேவர்களே என்றும் பெரியோர்கள் கருதும்படி அழகுநிறைந்த ஊர் ஆகிய அமராவதியைப் போன்ற திருமாலிருஞ்சோலை என்ற சிறந்த ஊரினையுடையவன்.

(வி - ம்.) சோமச்சந்திர விமானம் என்பது அழகர் எழுந்தருளி வரும் விமானத்தின் பெயர். சந்திரமண்டலம் போல அமைந்திருப்பதால் இதனைச் "சந்திரவடிவாம் விமானம்" என்றார். மந்திரம் மொழிந்து கொடியேற்றப்படுவதால் "மந்திர விருதுக்கொடி" என்றார். விருது - வெற்றி. துசம் - கொடி. தம்பம் - தூண்; கொடியேற்றும் தூண். இதனைக் கொடிமரம் என்பர். வல்லிசாதம் - காமவல்லி; இது கற்பகத்திற் படரும்

கோடி. திருமாலையாண்டான் என்பது உடையவருடைய குரு. இவருடைய உருவச்சிலை ஆண்டாள் சந்நிதியின் அருகில் நிறுத்தப்பட்டுள்ளது. இக் கோயிலில், நம்பி என்றது திருமலை நம்பியை. இவர் கோயிற்பணியாளரின் முதன்மை பெற்றவர். இவர் வழிவழி வந்தவர், இன்னும் இக் கோயிலில் இருந்து பணி புரிந்து வருகின்றனர். உபேந்திரன் - திருமால். இந்திரனுக்குத் துணையாயிருந்து பொன்னுலகத்தைப் புரந்தனர் என்பது வரலாறு.

### தார்

111-112: மார்பிடத்தில் என்னும்...துளபமாலையான்

(சொ - ள்.) மார்பின்கண் அணிந்துள்ள மதிக்கப்பெற்ற பல ஆபரணங்களின் நிறத்தோடு கலந்து வானவில்லைப் போலப் பச்சை நிறம் காட்டும் துழாய்மாலை யுடையவன்

(வி - ு.) இந்திர வில்லில், வெள்ளை, சிவப்பு, மஞ்சள், கறுப்பு, பச்சை, நீலம், பொன்மை என்ற ஏழு நிறங்களும் கலந்திருப்பினும் பச்சை நிறமே மிகுதியும் தோன்றும். அதுபோலத் துளசிமாலையில் மற்றைப் பணிகளின் ஒளி கலந்தாலும் பசுமை நிறம் மிகுதியும் தோன்றுவதால் ''வானவில்லைப்போல்'' என்றார்.

### கரி

112—116: உள்நின்றுஉருகும்...களியானையான்

(சொ - ள்.) மனத்துள் நின்று மனத்தையுருகச் செய்யும் வைணவம் ஆகிய உயர்ந்த மதம் பெருகவும், திருமகள் அழகிய கொம்பும் துதிக்கையும் ஆகச் சேரவும், நெருக்கமான பகுதிகள் ஒத்திருக்கின்ற வைகானதம், பாஞ்சராத்திரம் என்ற ஆகமங்களின் (சமய நூல்களின்) ஒலியாகிய மணியோசை முழங்கவும், ஆசை நீங்கும் வரையும் விடாமற் கட்டுகின்ற வடகலை தென்கலை என்ற மணிகட்டிய கயிறுகளும் எப்போதும் நீங்காத ஆனந்தமயமாகிய தாமரைப் பூப்போன்ற திருமால பாதங்களைக் கண்ட ''அத்துவிதானந்தம்'' என்ற பெயர் கொண்டயானை யுடையவன்.

(வி - ு.) அத்துவிதம் - இரண்டற்றது; ஒருபொருளையே கருதுவது. அதுவே இங்கு யானையாகக் கூறப்பட்டது. வைணவம் அதன் மதமாகவும், திருமகள் கொம்பு துதிக்கையாக

வும், 'வைகானதம் பாஞ்சராத்திரம்' என்ற உபநிடதங்கள் மணிகளாகவும், வடகலையும் தென்கலையும் மணிகள் கட்டிய கயிறுகவும் உருவகஞ் செய்யப்பட்டுள்ளன.

அழகர் இரண்டற்ற ஒருபொருள், அதனால், அத்துவிதா னந்தத்தை அவரது யானையாகக் கூறினர். திருமகள் என்பதும், வைணவமதம் என்பதும், வைகானதம், பாஞ்சராத்திரம் என்ற ஆகமங்களும், வடகலை தென்கலை என்ற பிரிவுகளும் அப் பொருளில் அடங்கும் என்பது கருத்து.

பரி

116—119 : தானந்த வர்க்கத்துடன்....வேதப்புரவியான்

(சொ - ள்.) அழகான சேணம் கடிவாளம் என்பவை பூண்டு எழுந்து வாயால் நுரைகளைக் கக்கிக் குதிரை என்ற வடிவத்தின் நலத்தை எல்லார்க்கும் காட்டிப் போர்க்களத் தில் எதிர்த்தவர் வானுலகஞ் செல்ல வழிகாட்டி எங்கும் தூசிகளை யுண்டாக்கிப பல மான்களையும் ஓட்டத்தில் வென்று விரைந்து சென்று நான்கு கால்கள், வால், வாய் என்ற ஆறு உறுப்புகளையும் போர் செய்யும் உறுப்புக ளாகக்கொண்டு முன்னணியிற் போற்றப்படுகின்ற குதிரை எனவும், அந்த எழுத்தின் இனத்தோடு கூடி ஒலியெழு மனிதர் வாய்ச்சொல்லைக் கடந்து கோயிலின் அமைப்பின் அழகைக் காட்டி முத்தியுலகம் செல்வதற்கு வழி காட்டி அணுவும் உயிர்களையும் காட்டிப் பெருமைதரும் பல நூல் களையும் தோற்றுவித்து ஆறு அங்கங்களையும் தன் அங்க மாகக்கொண்டு உலகத்தில் எவராலும் போற்றப்படுகின்ற வேதம் எனவும் இருபொருள் கொள்க. குதிரைக்கும் வேதத்திற்கும் சிலேடை இது. வேதமாகிய குதிரையை யுடையவன் என்க.

(வி - ம்.) குதிரைக்குரிய பண்புகள் வேதத்திற்கும் உள் ளன எனச் சொல்லால் ஒப்புமை காட்டினர். ஆறு அங்கங்கள் ஆவன : சிட்சை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபி சிதம், சோதிடம் என்பவை. வர்க்கம் - இனம். வாயின் + நுரை வாயின் + உரை எனப் பிரிக்க. கற்கி - குதிரை; கோயில். சொர்க்கம் - வானம்; மூத்தி. அணு - தூசி; உயிர். கலை - மான்; நூல். தாரணி - பூமி; தார் + அணி = முன்னணிப்படை என்று இரு பொருள் கொள்க.

## கொடி.

### 119—121: பாற்கடலிற் புக்க...கருடப்பதாகையான்

(சொ - ள்) முற்காலத்தில் அமுதங் கடைவதற்காகத் திருப்பாற்கடலில் போய்ச் சேர்ந்த ஒரு மந்தரமலையும் பூமியும், பம்பரமும், சக்கரமும் போலத் தலைசுழன்று கூடிய வேகம் குறைந்தபோது விழ அவ்வமயம் பார்த்து வாசுகியையும் சேடனையும் வாயாற் கௌவிக்கொண்டு போகும் திறல் வாய்ந்த கருடனாகிய கொடியையுடையவன்.

(வி - ம்.) மந்தரம் சுழல்வதற்குப் பம்பரஞ் சுழல்வது உவமை. பூமி சுழல்வதற்குச் சக்கரஞ் சுழல்வது உவமை. பம்பரம் நின்று தலைமட்டும் சுழல்வதாலும், சக்கரம் கீழ்மேல் உருள்வதாலும் முறையே உவமைகள் ஆயின. மந்தர மலையிற் கயிருகப் பிணிக்கப்பட்ட பாம்பு வாசுகி. பூமியைத் தலையிற் சுமந்து நிற்கும் பாம்பு ஆதிசேடன். மந்தரமலை வேகங்குறைந்து விழுந்தால் வாசுகி என்னும் பாம்பைப் பற்றுவதற்கு ஏற்ற அமையமாகும், பூமி வேகங்குறைந்து விழுந்தால் ஆதிசேடனைப் பற்றுவதற்கு ஏற்ற அமையமாகும் என்று கருதியிருக்கும் கருடன் என அதன் ஆற்றலும் பெருமையும் அழிவின்மையும் கூறினர். இறைவன் என்றும் அழிவில்லாதவன் ஆதலின் அவனது கொடியாகிய கருடனும் அழிவில்லாதவன் என்பது கருத்து. 'கருடாழ்வார்' எனவும் 'பெரியதிருவடி' எனவும் வைணவ சமயம் கூறும்.

## முரசம்

### 121—122: சுற்றியதன் குன்றில்...மும்முரசினன்

(சொ - ள்.) சூழ்ந்த திருமாலிருஞ்சோலையாகிய தனது மலையில் உள்ள சிங்கத்தின் முழக்கமும், யானையின் ஒலியும் மேகத்தின் முழக்கமும் நின்று ஆரவாரஞ் செய்வதால் கோயிலின் முற்றத்தில் எஞ்ஞான்றும் முழங்குகின்ற அந்த மூன்று முரசங்களை யுடையவன்.

(வி - ம்.) அழகர் கோயிலின் முன் பூசைக்காக முரசு முழங்குவதும் உண்டு என்றாலும் இயற்கையாக எப்போதும் அம் மலையில் முழங்குவன இம் மூன்று முழக்கங்களேயாதலின் அவற்றை அழகர்க்குரிய முரசங்களாகக் கற்பித்தார். அரி - சிங்கம். கரி - யானை. கொண்மூ - மேகம், பிறவிலங்கினங்களைக் கொன்று

றின்பதற்குச் சிங்கம் முழங்குவதால், அம் முழக்கத்தை வீர முரசாகவும், யானை தன்னினத்தை யழைப்பதற்காகப் பிளிறுவதால் அதனை நியாயமுரசாகவும், மேகம் மழை பெய் வதற்கு முழங்குவதால் அதனைக் கொடைமுரசாகவும் மூன்று வகையாகக் கொள்க.

ஆணை

122—123: என்றும் அவன்...ஆணை தரித்தோன்

(சொ - ள்.) எக்காலத்திலும் "அவன் அசையாமல் ஓர் அணுவும் கூட அசையாது" என்ற பழமொழிப்படி தனத்தால் நிலைபெற்ற ஆணையையுடையோன்.

(வி - ம்.) அணுவும் அவன் "அசையவேண்டும்" என்று கருதினால்தான் அசையும்; மலையும் அவ்வாறுதான். எல்லாப் பொருள்களும் இறைவன் ஆணையின்றி இயங்கா. திருவுள்ளம் கருதியபடி எல்லாப்பொருள்களும் இயங்கும், தமக்கென்று செயலுடையன அல்ல என்னும் கருத்துத் தோன்ற, "அவன் அசையாமல் அணு அசையாது" என்று சொல்லுகின்ற ஆணையையுடையவன் என்றார்.

123—127: நவநீதம் மேனியிற்...மேய்யான்

(சொ - ள்.) உடம்பின்மேல் தெறித்த வெண்ணெயும் மெல்லிய தன் கையில் எடுத்த வெண்ணெயும் வானத்தில் தோன்றும் விண்மீன்களும் வெண்ணிலாவும்போலத் தோன்றும்படி உறியில் இருந்த வெண்ணெயை எடுத்து உண்டவன்; சிவந்த சூரியனும் வெள்ளிய சந்திரனும் என்ன இரண்டு விழிகளும், சங்குசக்கரமும் தாங்கியவன்; அழகிய இடம் பரந்த உலகத்தையெல்லாம் உண்ட கோவைக்கனி போன்ற சிவந்த வாயையுடையவன்; அவ்வுலகங்கள் தங்கி யிருக்கும் திருவயிற்றையுடையவன்; தான் முதலில் உண்ட படியே அவ்வுலகங்களையெல்லாம் ஈன்ற திருவுந்தியை யுடையவன்; நெருங்கி அவ்வுலகங்களை அளந்த திருப் பாதங்களையுடையவன்; முற்காலத்தில் மாவலிபாற் சென்று "மூன்றடிமண்வேண்டும்" என்று வேண்டி ஏற்றுக்கொண்ட கையை யுடையவன்; அப் பூமியில் விளைந்த பச்சைப் பயிர் களின் வடிவம்போன்ற பசிய நிறமுடைய திருமேனி யுள்ளவன்.

(வி - ம்.) நவநீதம் - வெண்ணெய். உடு-நட்சத்திரம். கண்ணன் ஆகி ஆயர்பாடியில் விளையாடித் திரியும்போது மனை தோறும் சென்று உறியில் வைத்த வெண்ணெயைத் திருடியுண்டனன் என்பது வரலாறு. அவ்வாறு எடுத்துண்ணும்போது உடம்பிற்றெறித்த வெண்ணெய்த் துளிகள் விண்மீன்கள் போலப் புள்ளி புள்ளியாய்த் தோன்றின. கையில் எடுத்த வெண்ணெய்த்திரள் நிலவைப் போலத் தோன்றியது. அவன் உடல் கரியநிறம் உடையதாதலின் வானம்போலத் தோன்றியது என உவமைப் பொருத்தம் கொள்க. வலக் கண் சூரியன், இடக்கண் சந்திரன் என்று கூறுவர் அறிஞர். சக்கரத்தைச் சூரியன் என்று சொல்வர்; சங்கினைச் சந்திரன் என்று சொல்வர். அவ்வாறு சொல்லும்படி இருவிழியைச் சங்கமும் சக்கரமுமாகத் தாங்கியவன் என்பது கருத்து.

ஊழிக்காலத்தில் உலகத்தையுண்டு வயிற்றில் அடக்கி வைத்திருந்து பின் உமிழ்வான் என்றும், உந்திக்கமலத்திற் பிரமனைப் படைத்து உலகத்தை அவன் வாயிலாகப் படைப்பான் என்றும், ஓரடியால் உலகமுழுவதையும் அளந்தான் என்றும், மூன்றடி மண் இரந்து கையேற்று வாங்கினன் என்றும் பாகவதம் கூறுவதால் அவ்வாறே வாய், வயிறு, கொப்பூழ், தாள், கை இவற்றின் சிறப்பை எடுத்துக் காட்டினர்.

127—130 : உளங்கோண்டு...எழுத்தது ஆக்குவோன்

(சொ - ள்.) (உலகத்தைப் பெயர்க்கவேண்டும் என்று) உள்ளத்திற் கருதிப் பெயர்த்த கொம்பினையுடையவன்; உலகத்தையேந்திய முதுகினை யுடையவன்; ஆதிசேடனாகிய பாம்பின் படத்தை அழகிய பாயாகக்கொண்டவன்; தொடர்ந்த வினைகள் முழுவதையும் தொலைக்குந் தன் பெயரைச் சிந்தித்துத் திருமண்குறிகளை இட்ட அடியார்களுக்கு இம்மை இன்பமும் மறுமை இன்பமும் தருவோன்; எட்டெழுத்துக்களால் சிறிய எழுத்தாய்க் குறையும் "பிரமலிபி" என்ற பெயருடைய அஞ்செழுத்தையும் "இல்லை" என்ற மூன்றெழுத்தாக்கும் வலிமையுள்ளவன்.

(வி - ம்.) பன்றியுருவாய்ச் சென்று கடலுட்கிடந்த பாருருண்டையைக் கொம்பிலேந்திக் கொண்டுவந்தான் திருமால் என்பதும், ஆமை வடிவாய்ப் பூமி முழுவதையும் முதுகிலே சுமந்தான் என்பதும் புராண வரலாறு. அதுகுறித்து, "இடந்த மருப்பினன் ஏந்து முதுகான்" என்றார். "உண்டும் உமிழ்ந்தும்

கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும், கொண்ட கோலத்தோடு வீற்றிருந்தும் மணங்கூடியும், கண்டவாற்றால் தனக்கே யுலகெனநின்றான் றன்னை'' (திருவாய். 4, 6: 10) என்பதும், ''கிடந்திருந்தும் நின்றளந்தும் கேழலாய்க் கீழ்புக், கிடந்திடும் தன்னுட் கரக்கு முமிழும் தடம்பெருந் தோளாறத் தழுவும் பாரென்னும், மடந்தையை மால்செய்கின்ற மாலார்காண் பாரே'' (திருவாய். 2 8: 7) என்பதும் இதனை வலியுறுத்தும். திருமாலின் திருநாமஞ் சிந்திப்பவர்க்கு வினைகள் தொலையும் என்பதும், திருமண் குறியிடுவோர்க்கும் இகம் பரம் இரண்டிலும் வேண்டும் இன்பம் சித்திக்கும் என்பதும் இங்குக் கூறப்பட்டன. எட்டெழுத்துக்கள் 'ஓம் நாராயணாய நம' என்பன. ஓம் என்பதை ஓர் எழுத்தாகக் கொள்க. பிஞ்சு எழுத்து இளமையான எழுத்து பிஞ்சு+எழுத்து=பிஞ்செழுத்து எனக் குறைந்து நின்ற உலகவழக்கச் சொல்லாகவும் கொள்ளலாம். பிஞ்சு - கெட்டுப்போன அஞ்சு எழுத்து-பிரமலிபி என்பது. அஞ்சு+எழுத்து=யாவரும் அஞ்சத்தக்க எழுத்து என்றும் பொருள் கொள்ளலாம். தனது பெயர் ஆகிய எட்டெழுத்தை யோதித் துதிப்பவர்க்குப் பிரமனாற் படைக்கும் பிறவித்துன்பத்தை நீக்கி வைகுந்தத்திற் சேர்ப்பவன் என்பது கருத்து. ''எட்டெழுத்தைக் கருத்திற்குறித் திட்டுகித் தம்பரவும், சிட்டர்கட் குத்திருப் பொற்பதத்தைச் சிறக்கத்தரும்' என்பதும் கண்டு கொள்க.

130—135: வஞ்சம் அறத் தங்கள்....நல்காத தம்பிரான்

(சொ - ள்.) வஞ்சகம் இல்லாமல் தங்களுக்குரிய மலைகள் எங்கேயிருந்தாலும் அவற்றை விடுத்துச் சிவபெருமான் முதலிய தேவர்கள் யாவரும் நம்முடைய மலை இதுதான் என்று வந்து தங்கியிருக்கும் மிகுந்த நன்புடையவன்; அந்த ஒரு வலிய முனிவருக்கு இரண்டு கண்களையும் கெடுத்துப் பின் கொடுத்தவன். தன்னைத் துதித்த ஒரு யானைக்கன்றுக்குக் கண் கொடுத்த கண்ணன் என்ற பெயருடையவன்; நன்றாகச் சொன்னால் அவன் அஞ்சு படையையுடையவன்; என்றாலும் அஞ்சாமல் அழகிய கையில் வகிக்கும் உத்தியோகச் சக்கரத்தைக் கொண்டவன்; குறையாமல் விண்ணாகிய இடத்தையெல்லாம் கவர்ந்து கொண்ட அகன்ற பொன்மயமாகிய இலங்கையை வெற்றியால் தனக்குரிமையாக்கிக்கொண்டவனாக இருந்தும் மண்ணாகிய பூமியைக் கைமேந்தித் தானமாக ஏற்று வாங்கி

யவன்; இசைகள் பாடி விளங்கும் அழகுபொருந்திய திருவரங்கத்தில் வீற்றிருக்கும் திருமால்போல எவர்க்கும் பூமாலையை வழங்காத கடவுள்.

(வி - ம்.) மிகுந்த நண்புடையவர்கள், தம்முடைய பொருள்கள் என்றும் நண்பருடைய பொருள்கள் என்றும் வேறுபாடு கருதமாட்டார் என்பது தோன்ற, "வஞ்சம் அற" என்றார். வயமுனி என்பது பச்சைவாரணதாசர் என்பவரைக் குறிக்கும். இவர் திருக்கச்சிநம்பி முன்னோர்களுள் ஒருவர். பச்சைவாரணப் பெருமாள் கோயிலில் வழிபட்டவர். அத்திரி என்னும் தலத்தில் இவர் கண்ணைக் கெடுத்ததாகவும், அழகர் மலையில் இவருக்குக் கண் கொடுத்ததாகவும் தல வரலாறு கூறும் என்று தெரிகிறது. யானைக் கன்றுக்குக் கண் கொடுத்தது, "மழைபாய் கடாக்கரிக் கண் கொடுத்தும்" (அழகர் பிள்ளைத். அம்புலிப். 4) எனக் கூறப்பட்டுள்ளது. அஞ்சு படை- ஐந்து ஆயுதம். அவை சங்கு, சக்கரம், வில், கதை, வாள் என்பன. அஞ்சுபடையோன் பிறர் அஞ்சுவதற்காக வைத்திருக்கும் ஆயுதங்கள் என்றும், இவன் அஞ்சாமல் இருப்பவன் என்றும், கையில் எப்போதும் இருப்பது உத்தியோகச் சக்கரம் ஒன்றுதான் என்றும், ஏவுகின்ற சக்கரம் (பிரயோகச் சக்கரம்) வேண்டும்போதுதான் வரும் என்றும் தோன்ற, "அஞ்சுபடையோன்... சக்கரத்தான்" என்றார். பொன்னிலங்கை வென்று கைக்கொண்டதும், மூன்றடி மண் மாவலிபால் இரந்து வாங்கியதும் தேவர்கள் துன்பத்தை நீக்குவதற்காகவே, தன் பொருட்டன்றென்னும் கருத்து வெளிப்பட, "பொன்னிலங்கை...தானமாய் வாங்குவோன்" என்றார். அழகர் கோயிலில் அழகருக்குச் சாத்தும் பூமாலை ஆண்டாளுக்குமட்டும் அளிக்காமல் நாச்சியார் பலருக்கும் அளிப்பது வழக்கம் ஆதலால் "தாரணி நல்காத தம்பிரான்" என்றார்.

135—140: காரணியும் செங்கைத்...பூசித்தோன்

(சொ - ள்.) கொடையில் மேகத்தை யொத்த சிவந்த கைத் தலத்திலும் தென்மதுரை என்ற ஊரிலும், சங்கத்து அழகன் என்று சொல்லும் தன்மையுடைய கடவுள், எவ்விடங்கட்கும் திரும்பாமல் தானேயறிந்து செல்லுகின்ற ஊர்தியாகிய செழித்த கருடாழ்வானுக்கும், சிறந்த தனது திருவடி நிலைக்கும் அரசு கொடுத்தவன். விரும்பத்தக்க முகம் சந்திரன் ஆக விளங்கும் சவுந்தர வல்லியுடன் சுந்தரராசன் என்று சொல்லக் காட்சியளிப்பவன். அழகுள்ளது

என்று சொல்ல நலம் அமைந்த புயத்தாலும் அழகினாலும் 'சுந்தரத் தோளன்' என்றும் மலையலங்காரன் என்றும் பெயர் பெற்றவன்; பலவிதமாகப் பொருந்திய தெய்வத்தை மனிதர் யாரும் பூசனைபுரிந்த புண்ணியமே உருவெடுத்து வந்து தன்னைப் பூசிக்க நின்றவன்.

(வி - ம்.) கார் அணியும்-மேகத்தைப் புனைந்திருக்கின்ற என்றும் பொருள் கொள்ளலாம். மேகம் அதன் பண்பாகிய கொடையையுணர்த்தும் ஆகுபெயர். கையிற் சங்கம் வைத்திருக்கும் அழகன் என்றும், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் இருக்கும் அழகன் என்றும், பொருள் கொள்க. உகைக்கும்-செலுத்துகின்ற திருமால் தன்மீது ஏறியவுடன் அவர் இன்னவிடத்திற்குச் செல்லக் கருதுகின்றார் என்று அவர் குறிப்பறிந்து செல்லும் தெய்வத்தன்மை கருடன் பண்பாக இருப்பதால் "திருப்பாது உகைக்கும் செழுங்கருடன்" என்றார், சவுந்தரவல்லி என்பது அத் தலத்து நாச்சியார் திருப்பெயர். மனிதர்கள் எவ்வெத் தெய்வத்தைக் குறித்துப் பூசித்தாலும் அப் புண்ணியங்கள் எல்லாம் தன்னையே வந்து சாரும் என்பது தோன்றப் "புண்ணியமே தன்னை வந்து பூசித்தோன்" என்றார். தருமதேவதை வழிபட்டது அத் தலத்தின் வரலாற்றால் அறியலாம்; இந்நூல் 99ஆம் கண்ணியாலும் அறியலாம்.

140—142: கண் அனைய...அம்புயங்கள் தருவோன்

(சொ - ள்.) கண்ணைப்போன்ற திருவடிகளாகிய தாமரை மலர்களைப் போற்றிய மலயத்துவச பாண்டியனது பாவமாகிய மும்மலங்களையும் நீக்கியவன்; குற்றமில்லாத குடிகட்குக் காவல் ஆகிய புயங்களையுடைய அம்பரீடன் என்ற அரசனுக்குத் தன்னுடைய திருவடித்தாமரை மலரைத் தந்தவன்.

(வி - ம்.) மலயத்துவச பாண்டியன் இத் தலத்திற் கோயிற் றிருப்பணி, நித்த விழா செய்வித்துப் பேறு பெற்றவன். இவ் வரலாறு தலபுராணத்தில் உள்ளது. "பதித்த மலயத்துவச பாண்டியனை யாண்டனையே" (அழகர் கலம். 1) எனவும் கூறுவதாலும் அறியலாம். அரண்+அம்புயம்=அரணம்புயம்-காவல் ஆகிய புயங்கள்: சரணம்+அம்புயம்=சரணம்புயம்-பாதம் ஆகிய தாமரை. அம்பரீடன் என்ற மன்னன் இத் தலத்தில் வழிபட்டுப் பேறுபெற்றவன்.

### கோடைத் திருவிழா

**142—144: திருநாளில் சந்தம்...திருவிழாக் கொண்டருளி**

(சொ - ள்.) பல திருநாள்களில் சந்தனச்சோலையின் நடுவில் தவழ்ந்து வருகின்ற தென்றற்காற்றானது மந்தமான காற்றாக வீசும்போது மனிதர்கள் நினைக்கும் வாடைக் காற்றுக் கொண்டுவருகின்ற மழைத்துளிகளைப்போல மலரில் உள்ள தேன்துளி தெறித்து விழுகின்ற கோடைக் காலத்துத் திருவிழாவை ஏற்றுக்கொண்டு.

(வி - ம்.) திருநாட்களில் ஒரு திருநாள் கோடைத்திருவிழா என்பது. அது கோடைக்காலத்தில் நிகழ்வதால் அப் பெயர் பெற்றது. சித்திரைத்திங்கள் நிறை நிலா நாளில் இது நிகழ்கின்றது; இன்றும் காணலாம். சித்திரை இளவேனிற் காலம் ஆதலால் மரங்களில் மலர் பூத்துத் தேன் ஒழுகும் என்றும், அத் துளி வாடைக்காற்றுக் கொண்டு வரும் மழைத்துளி போல இருக்கும் என்றும் கோடைக்காலத்தைச் சிறப்பித்தார்.

**144—147: நீடுவிடைக் குன்றில்...வந்து சார்ந்தருளி**

(சொ - ள்.) நீண்ட அந்த இடபமலை என்ற சோலைமலையிற் பெருகிய வெள்ளக்கொழுந்து விரைந்து சென்று வையையாற்றிற் சென்று எதிர்த்து நிற்பதுபோல அழகர் மலையிலுள்ளோர் யாவரும் ஆங்குப்போய்க் கூடுவதால் கூடல் என்ற பெயர் பெற்ற மதுரை என்ற சிறந்த நகரத்தில் இதழ்விரிந்த பூமாலையுடைய அழகர் எழுந்தருளி ஆடல் உடனே கற்போன்ற மனங்களும் கரையும்படி பணிவோர்கட்கு முன்னே தல்லாகுளம் என்னும் இடத்தைச் சார்ந்தருளி.

(வி - ம்.) அழகர் மலையில் உள்ளவர்கள் யாவரும் வையையாற்றிற்சென்று கூடிய கூட்டத்திற்கு அழகர் மலையில் எழுந்த வெள்ளம் வையையிற் சென்றுதேங்கி நிற்பது உவமை. அழகர் மலையில் உள்ளார் கூடுவதாற் கூடல் எனப் பெயர் பெற்றது என்றார். ஏடு அலர் தாரான் - இதழ் விரியும் பூமாலை புனைந்தவன்; இஃது அழகரை யுணர்த்தும். கல் + ஆந்த + உள்ளங்கள் = கல்லாகிய மனங்கள்; கல்லைப்போன்ற கடினம் ஆன மனங்கள். தல்லா குளம் என்பது மதுரையில் வையை ஆற்றையடுத்த ஓர் இடம். அவ்விடத்தில் வந்து தங்கியிருந்து செல்வது, சூரியன் எழும்போது வையையில் பெருமாள் இறங்குவது கோயில்மரபு.

147—150: மெல்ல நரலோகம் மீது...தனில் புகுமுன்

(சொ - ள்.) மண்ணுலகத்தின்மேலே வருகின்ற பொன்னுலகம் இஃது என்று சிலர் கருதிப் பார்க்கவும் தேவருலகத்திலிருந்து வந்த இந்திரவிமானந்தான் இஃது என்றும், சோமச்சந்திர விமானமே இஃது என்றும் பழைமையான எட்டு அங்கங்களையுடைய விமானங்கள் ஆகிய அவையிரண்டும்தாம் வருகின்றன என்றும் சொல்லும்படி தாங்கும் விமானத்தில் ஏறிச் சிறிது தூரம் சென்றவுடன்.

(வி - ரை.) அழகர் ஏறிச்சென்ற விமானத்தைப் பொன்னுலகம் என்று சிலர் கருதிப் பார்த்தார். இந்திரவிமானம் என்று சிலர் எண்ணினர். அழகருக்குரிய சோமச்சந்திரவிமானம் என்று சிலர் சொல்லினர். இவ்வாறு பலரும் கூற அழகர் எழுந்தருளும் விமானத்தில் ஏறி தல்லாகுளத்திலிருந்து வையையாற்றங் கரையை யடைந்தார்.

150—160: தீங்கிலா உன்னி...வையைநதி எய்தி

(சொ - ள்.) நல்லோர்கள் ஆகிய அன்பர் நினைத்து விமானத்தைப் பலமாக அழுத்தித் தாக்கும்போது அம் பாரம் பொறுக்கமாட்டாமல் ஆதிசேடன் முடி வெடித்து நாகமணி ஒன்று மேலே தெறித்து வந்ததுபோல் வானத்தில் சூரியன் எழுந்து தோன்ற அப்போது அழகர், விமானத்திலிருந்து இறங்கிக் குதிரை நம்பிரான்மேல் ஏறி நடத்திச்சென்று, கோடி சூரியனும் கோடி குளிர்ந்த சந்திரனும் விரைவாக வரிசையாக எழுந்தன என்று சொல்லும்படி நீண்ட அழகிய கோடிகளும், வெள்ளிக் குடைகளும் விளங்க, ஒளிபொருந்திய கொடிகள் எல்லாம் தேவர்களது வெயர்வையைத் துடைப்பதுபோல் விண்ணில் உயர்ந்து நிற்க நடக்கின்ற யானைகளும் அதில் ஏற்றி அடிக்கப்படும் முரசமும் மேகமும் இடியும் போல முழங்கிவர, கெண்டை மீன்களை அள்ளிவீசும் அலைகளையுடைய வையை யாற்றுக்குள் மனிதர் வெள்ளம் அளவுகடந்து செல்ல அழகர் சிறப்புப்பொருந்திய மேகம்போற் செல்லுவதால் நீரைச் செலுத்துகின்ற துருத்திகள் மழைபோல நீரைச் சிதற, துன்பம் நீக்கும் எண்ணத்துடன் வந்து வரம்கேட்கும்

அடியார்களுக் கெல்லாம் கேட்ட வரங்களைக் கிணறில் வரும் ஊற்றுப் போலத் தருவார் என்ற விருப்பத்தால் காணிக்கைகளையெடுத்து அன்பர் கைகளாற் கோடிக்கணக் காக இடுகின்ற ஆணிப்பொன்னாற் செய்த கொப்பரை அழகருக்கு முன்னே செல்ல, இந்திரனுக்கு ஒப்பாக இவை இருக்கின்றன என்று புகழ்ந்து சொல்லும்படி வையை நதிக்கரையில் அமைத்திருக்கும் ஓராயிரக் கணக்கான திருக்கண் மண்டபங்களிலும் சென்று தங்கி.

(வி - ம்.) வெய்யோன் - சூரியன். அனந்தன் - ஆதிசேடன். சென்னி-தலை. சேடன் முடிமணியொன்று தெறித்தது போன்றது எனக் கற்பித்தார். அழகர் ஏறும் குதிரையைக் குதிரை நம்பிரான் என்றார் உயர்வுகுறித்து. அம்பரம் - ஆகாயம். கொடிகள் சூரியன்போலத் துலங்கின. குடைகள் சந்திரன்போல விளங்கின. சொர்கம்-பொன்னுலகம். சொர்க்கத்து விண்ணோர் எனக் கூட்டுக. யானைமேல் முரசம் ஏற்றியடித்துச் செல்வது வழக்கம். உருமேறு - இடி. புயல் - மேகம். அழகர் ஆற்றுள் இறங்கும்போது மனிதர்கள் கூட்டமாக வையை யாற்றினுள்ளும் இரு கரைகளிலும் இருந்து பார்த்த காட்சியை ''நரவெள்ளம் கரைகடந்து மீதூர'' என்றார். வேனில் விழா ஆதலால் நீர்த் துருத்தியால் நீரைப் பாய்ச்சி மக்களுக்குக் குளிர்ச்சியூட்டுவது வழக்கம். அதுகுறித்துத் துருத்தியிற் பாய்ச்சும் நீரை மழைபாகவும் அழகரை மேகமாகவும் கூறினார். வையைக்கரையிற் பல திருக்கண் மண்டபம் அமைத்திருப்பார் பல அடியார்கள், அம் மண்டபங்கள் தோறும் சென்று நின்று பின் எழுந்தருளுவது கோயில் மரபு.

160—165: உரம் தரித்த வார்மண்டு...வந்த திருமால்

(சொ - ள்.) தன் மார்பில் தங்கியிருக்கும் கச்சணிந்த தனத்தையுடைய திருமகள் விருப்பம்போல் வையைக்கு வடகிழக்காக விலகியிருக்கும் வண்டியூர் மண்டபத்தில் மகிழ்ச்சியுடன் தங்கியிருந்து, சிறப்புப்பொருந்திய திருமாலுக்கு ஊர்தியாக வா என்று ஆதிசேடனை யழைக்க, அவ்வமயம் சூரியன் மறைய இருள் வந்து சூழ, தூயவன் ஆகிய பெருமாள், முன் யாவரும் மயங்கப் பகலை மறைத்தான்; இப்போது இரவைப் பகலாக்கினான் என்று யாவரும் சொல்லும்படியும், தெளிவாகத் திக்கடவுளும் வந்து அடி

வார்களுடன் கூடி விளையாடுவது போலவும், சந்திரனும் தெய்வமும் வந்து வணங்குவது போலவும் இரவில் கைத் தீவட்டிகளும் வாணக்காட்சிகளும் எல்லாரும் கண்டுகளிக்க மேன்மையான விளக்கொளி வடிவமாய் வந்த திருமால் ஆகிய அழகர்.

(வி - ம்.) வார்மண்டு கொங்கை என்பது கொங்கையை யுடையாளை உணர்த்தியது அன்மொழித்தொகை. உரம்-மார்பு. உரம் தரித்த என்ற குறிப்பால் திருமகள் என்ற பொருள் தோன்றிற்று. வண்டியூர் மண்டபத்தில் இருந்து எழுந்தருளும் போது ஆதிசேடன் ஆகிய வாகனத்தில் வருவது மரபுபோலும். அதனால் "சேடனைப் போயமைக்க" என்றார். அனந்தாழ்வான் வாகனத்தை எடுத்து வந்தபோது சூரியன் மறைந்தான். இரவு வந்தது. இருள் சூழ்ந்தவுடன் தீவட்டி எல்லாரும் எடுத்தார்கள். வாணங்களும் பொருத்தினார்கள். பகல்போல இருந்தது அவ் விரவு. அதனைக் கண்டவர்கள் அழகர், முன்னே பாரதப் போரில் பகலை இரவாக்கினார்; இப்போது இரவைப் பகலாக்கினார் போலும் என்று கூறினர். தீவட்டியும் வாணமும், முறையே தீக்கடவுளும் திங்கட்கடவுளும் அடியார்களுடன் கூடிப் பூசிப்பதற்கு வந்ததுபோலத் தோன்றியது எனக் கருத்தை விரித்துக் கொள்க.

### 166—169: அவனி பரிக்கும்...திருமுகமும் கண்டேன்

(சொ - ள்.) பூமியைத் தாங்கும் ஆதிசேடன் ஆகிய வாகனத்தின்மீது பவனிவரப் பார்த்து வணங்கினேன். அந்த அழகர் திருமேனியழகிற் பின்னழகும் முன்னழகும் ஆகிய பேரழகு முழுவதையும் பார்ப்பதற்கு முன்னே முன்னழகை மட்டும் கண்டவுடன் காதல் கொண்டேன். பின்னழகைப் பார்த்தாலும் துன்பம் மிகவும் உண்டாகும் என்று கருதி மற்றவர்களைப் பார்த்து எழுந்து வருவதற்காக அவனுடைய தூய சிறந்த முகத்தையும் அவனுடைய மெல்லிய மார்பிற்பொருந்திய தாமரையில் வாழும் திருமகளுடைய முகத்தையும் பார்த்தேன்.

(வி - ம்.) 'முன்னிலும் பின்பழகியர்' என்று பெருமாளுக்கு ஒரு திருப்பெயர் உண்டு. "முன்னிலும்பின் பழகியநம் பெருமாள்" (சிரங்க. ஊசல், 8) என்பது காண்க.

**169—171: அமலன் அரவணை...மாதர்க்கு உரைத்தேன்**

(சொ - ள்.) தூயவன் பாம்புப்படுக்கை யுடையவன் என்று சொல்வதும் உண்டு. தலைவனாகிய சிவனைப்போல் இரத்தலாகிய தொழிலைப் பொருந்தாதவன் என்று சொல்வதும் உண்டு என்றாலும் "பரவைத் திருவணையான்" என்று நானும் அவனைச் சொல்வது பொய்யாகும் என்று வடிவழகு பொருந்திய பெண்களுக்கு எல்லாம் சொன்னேன்.

(வி - ம்.) பரவைத் திரு அணையான்-கடலிற் சிறந்த அணை கட்டியவன் என்பது ஒரு பொருள். கடலிற் பிறந்த திருமகளை அணையாதவன் என்பது மற்றொரு பொருள். தலைவி குறித்த பொருள் திருமகளைச் சேராதவன் என்பது.

**171—184: மறு அணையும் செங்கரத்...நடம் செய்தீரே**

(சொ - ள்.) வாசம் பொருந்திய சிவந்த கையிலே முன் திருடிய வெண்ணெயைப்போன்ற சங்கு தங்கியிருக்க என் கையில் உள்ள சங்குகளை ஏன் கவர்ந்தீர்? எங்கள் கொங்கை மலையில் விழும் கண்ணீர் அருவியை மாலிருஞ் சோலைமலையிலிருந்து வரும் அருவியாகக் கொண்டீரோ? விலை மதிக்க முடியாத பொன்னுடை ஒன்று இருந்தால் உமக்குப போதாதோ? மரவுரி தரித்திருந்தீர், (இராமனாகிக் காட்டுக்குப் போனபோது) அதிலும் வெறுப்பு வந்ததேன்? நல்ல சேலைகளை முத்துமாலை யணிந்த தனத்தையுடைய பாஞ்சாலிக்கு முன்னே கொடுத்ததை யறியாமல் மறந்துவிட்டீரோ? திரும்பவும் திருட்டுத் தொழிலைத் தொடங்கினீரோ? குளிர்ச்சி பொருந்திய நூலாற் செய்யப்பட்ட எங்களது நுண்ணிய சேலைதாம் உங்களுக்குப் பால் ஆடையாகுமா? (எங்கள் சேலைகளைக் கவர்ந்ததற்குக் காரணம் என்ன?) சொல்வீர். உங்களைக் கண்டு மயக்கங்கொண்டு நெருங்கி இரைச்சலிடுகின்ற எங்கள் சொற்களைக் கேளாமல் இருக்கின்றீர். திருப்பாற் கடலின்மேல்தானே நீங்கள் உறங்குவது? வையையாற்றின் நீரின்மேலும் உறங்குவது உண்டோ? இவ்வுலகில் நிலா வெள்ளமாகப் பொருந்தியதோ? திருப்பாற்கடல்தான் அங்கு நில்லாமல் உங்களோடு கூடிச்சேர்ந்து வந்ததோ?

இரவு என்னும் யானை கசேந்திரன் ஆனால் அதன்மேல் வரும் வன்மீனையும் நீங்கள் விட்டுவிடலாமா? இசை பாடுகின்ற நடனம் புரிகின்ற இளமையான மாதர்களுக்கு மனமிரங்குவீர் அன்றோ? காமமயக்கத்தால் மனம் நடுங்கு கின்ற எம்போன்ற இளமையான மாதர்க்கும் இரங்கக் கூடாதா? ஒருகாலத்தில் வெண்மையான பாலைக் கறப் பவர்கள் குனிந்துபோய் முதிர்ந்த கன்றை மடித்தலத்தில் விட்டுப் பின் கறப்பதை நீர் அறியீர்போலும்! (கன்றை விடாமலே எல்லாம் கறந்துவிட்டீர்) அருகிற் சென்று மெல்லிய பாலின் துளி தெறித்திருந்த பருத்த கொங்கை யைப் பாற்குடம் என்று கருதி அன்புடன் (கண்ணனாகப் பிறந்து வளர்ந்தபோது) நீர் எடுத்ததை அறியீரோ? மின்னல்போன்ற கோவியர் செய்ய விதழின்மேல் தெறித்த வெண்ணெயை யுண்பதுபோல அந்த இதழினை நீர் முன்னே சுவைத்ததை மறந்தீரோ? அழகு தழைத்த கோவர்த்தனம் என்னும் மலையை அந் நாளிற் கையால் எடுத்தீர்; குளிர்ந்த அமுதம் வரும்படி கடைந்தீர்; காளிங்கன் என்னும் பாம்பின்மீது நடித்தீர்.

(வி - ம்.) சங்கு - வளையல். சங்கிருக்க என் சங்கினை ஏன் கொண்டீர் எனச் சொல் நயம் காண்க. சோலைமலையில் வரும் அருவியை எப்போதும் கண்டு களிக்கின்ற நீர் எங்கள் கண்ணீர் அருவியும் கண்டு களிக்கின்றீரோ? இரக்கம் சிறிதும் இல்லை என்பது கருத்து. காமமயக்கத்தால் உடல்மெலிந்து வளையல் கழன்று விழுவதும் உடை நெகிழ்ந்து சோர்வதும் இயற்கை; அது குறித்துக் கூறுகின்றார். வற்கலை - மரவுரி. பொற்கலை- பொன்னுடை. கொங்கைக்கு - கொங்கையை யுடையவளுக்கு என அன்மொழியாயிற்று. பால் ஆடை - பாலில் உள்ள ஆடை. அதனை விரும்பியதுபோல நீங்கள் எமது ஆடையையும் விரும்பிக் கவர்ந்துகொண்டீர் போலும் என்பது கருத்து. மீன் - விண்ணி லுள்ள கோள்கள் எல்லாவற்றையும் உணர்த்தும். வல்+மீன= வன்மீன், வன்மீன் - பெரிய கோளாகிய சந்திரன்; வல்மீன் - முதலை, பெரிய இருளைக் கசேந்திரன் என்று காப்பாற்றினாலும் பெரிய மீனாகிய சந்திரனையாவது தொலைக்கவேண்டாவா என்பது குறிப்பு. கன்று - வளையல். கன்றை விட்டுக் கறப்பது போல வளையலை மாத்திரம்விட்டு மற்றவற்றைக் கவராமல் அதனையும் கவர்ந்தீர் என்பது குறிப்பு. கொங்கையைப் பாற் குடமென்று எடுத்தது, கோவியர் செவ்விதழை யுண்டது,

மலையை யெடுத்தது, திருப்பாற்கடலில் அமுதங் கடைந்தது, பாம்பில் நடனஞ்செய்தது ஆகிய தொழில்கள் முன்னரே பழக்கமுடையன. ஆதலால், எங்களுடன் சேர்ந்து இன்பந்தருவீர் என்பது குறிப்பு. இத்தொழில்கள் புணர்ச்சியைக் குறிப்பன: இடக்கரடக்கல்.

184—187 : என்று என்று சீபதியைச்...சார்ந்தான்

(சொ - ள்.) என்று இவ்வாறாக எடுத்துக்கூறி ஐந்து ஆயுதங் கொண்டவன் ஆகிய அழகர் மனக்கொள்கை பெறுவதற்கு நான் நிற்க என் முகத்தை நோக்காமல் தேனூர் மண்டபத்தைச் சார்ந்து வலமாகச் சுற்றிப் பழைமையான விரசையென்ற நதியுடன் சேர்ந்த வைகுந்தமாகிய வீடு இதுதான் என்று கருதி யானையைக் காத்த திருமால் அதற்குட் புகுந்தார். அங்குச் செய்த வரிசையும் உபசாரமும் ஏற்றுக்கொண்டு பின் பல்லக்கில் எழுந்தருளித் தவம் நிறைந்த சோலைமலைக்கு வந்து சேர்ந்தார்.

(வி - ம்.) தேனூர் என்பது மிகப் பழைமையான ஓர் ஊர். 'தேனூர் வெற்றிலை மானூர் சுண்ணாம்பு' என்பது ஒரு பழமொழி. ஐங்குறு நூற்றில் "தேனூர்" என்று ஊர்ப்பெயர் வந்துள்ளது. புரசை - வைகுந்தத்திற்கு அருகில் உள்ள ஒரு யாறு. புரசை - யானையின் கழுத்தில் மணி கட்டியிருக்கும் கயிறு. புரசைமலை - கயிறு கட்டிய மலை. இது குறிப்பால் யானையை யுணர்த்தியது. சிவிகை - பல்லக்கு. தபசு ஆர் அம் சீபதி - தவம் நிறைந்த அழகிய சீபதி என்க. சீபதி - சோலைமலை.

187—191: இபம் உண்ட வெள்ளிற்கனி...சொல்லாய்

(சொ - ள்.) நான் அன்றுமுதல் யானையுண்ட விளங்கனிபோல் மெலிந்தேன். பிரமனைப் பெற்றவனாகிய அழகன் மனங்கனிந்திலன். இன்னும், வானில் ஊர்ந்துவரும் இளமதியம் திருத்தமானதோ? அலையோடு கூடிய கடலின் வாய் சிறிதோ? கோவைக்கனிபோன்ற செவ்விதழ் உடைய அமற்பெண்கள் கூறும் அலர்மொழி எனக்கு எமனல்லவோ? துன்பம் பொருந்திய தென்றற்காற்றாகிய தேருடைய மன்மதனும் ஓர் எமன் அல்லனோ? உருக்கி வார்த்துச் செய்யப்படாத விடைமணியும் ஒன்றுண்டோ? வேறாகிய மூங்கில்களுடன் வாடிக்கிடந்தாலும் சுட்டுத் துளை செய்யப்

படாத புல்லாங்குழலும் உண்டோ? (இவை எல்லாம் எவ்வாறு எனக்குக் காமமயக்கத்தை மிகைப்படுத்தாமல் இருக்கும்) இதற்கு ஒரு சூழ்ச்சி செய்வாய் என்றாள்.

(வி - ம்.) தேரையுண்ட இளநீர் என்பது போல 'யானை யுண்ட விளங்கனி' என்று வழங்குகிறது. இது விளங்கனிக்கு வரும் ஒரு நோய். அவ்விளங்கனி உள்ளீடு இன்றி ஓடுமட்டும் இருக்கும் என்று தெரிகிறது. செவ்வை மதியோ என்பது குறிப்பால் அது வளைந்தது: உடற்கோணல்போல மனக் கோணலும் உண்டு; அதனால் அதுவே என்னை வருத்தும் என்ற பொருள் தொனிக்கிறது. கடல் வாய் சிறிதோ என்பது பெரிது; எப்போதும் ஆரவாரஞ்செய்து என்னை வருத்தும் என்பது குறிப்பு. அயல்மாதர் மொழியும் கூற்று; காமனும் ஒரு கூற்று ஆதலால், என் உயிர் எவ்வாறு நிற்கும்? நில்லாது என்பது; உருக்கி ஊற்றாத சேமணி இருந்தால் அஃது என்மனத்தை யுருக்கி ஊற்றாமல் இருக்கும் என்ற பொருள் தொனிக்கின்றது. சுட்டுத் துளைத்த குழல் ஆதலால் அக்குழல் என்னைச் சுட்டுத் துளைக் கின்றது என்பது குறிப்பில் தோன்றும் பொருள். விரகங் கொண்ட மாதர்களுக்குப் பகையான பொருள்களை அடியில் வரும் வெண்பாவிற் காண்க.

"தென்றற்கும் வீணைக்குஞ் சோமணிக்குங் கோகிலத்துக்
கன்றிற் கமைக்காழிக் கம்புலிக்கு நின்றரற்று
மன்னைக்கு மாரற் கயர்ந்தாளென் றன்னமே
என்னைக்கு மாரற் கியம்பு."

இதில், கோகிலத்தக்கு, அன்பிற்கு, அமைக்கு, ஆழிக்கு, அம்புலிக்கும் எனப் பிரித்து அமைக்கு-வேய்ங்குழலுக்கு எனப் பொருள் கொள்க. அமை-மூங்கில்.

191—198 : கிளி அரசே என் கூடு...பேசேன்றே

(சொ - ள்.) கிளிக்கெல்லாம் அரசே! என் உடம்பு இப்போது பொன்போன்ற பசலை பூத்திருக்கும் ; இந்த நிறத்தினால் உன் கூடும் என் கூடும் ஒன்றுபோலத் தோன்றுகிறது, என் கூட்டில் மாம்பழம் இருக்கின்றது: வளம்பொருந்திய இனிய கோவைக்கனி இருக்கின்றது; சரப்பலாப்பழமும் இருக்கிறது; பக்கத்தில் குழைந்த மனமும் உள்ளது; குழம்பிய மனப்பகுதியும் உண்டு; தெளிந்த மனப்பகுதியும் உண்டு; உனது விருப்பம் அறிந்து

உனக்கு வேண்டியவற்றை ஊட்டுவேன்; பச்சை வடிவத்தை யுடையாய் என்று புகழ்ந்து சீராட்டுவேன்; பட்டு உடையால் உடம்பைத் துடைப்பேன்; உனக்காக அமைத்திருக்கும் கூட்டில் தனியாசாக வீற்றிருப்பாய்; (கண்ணேறு படாதிருக்க) ஆலத்தி எடுத்துக் காட்டி உயர்ந்த தன்மை யுடைய வாசனைப் புகையும் ஊட்டுவேன்; அருகில் இளவெயிலில் உன் இறகை உலர்த்தி யெடுத்து ஒருதரம் முத்தமிட்டு வளையல் அணிந்த என் முன்கையின்மேல் வைத்துத் துளசிமாலை புனைந்த அழகர் ஆகிய கடவுளின் சிறந்த பெயர்களையெல்லாம் என்னைப்போல நீயும் மயக்கம் நீங்கும்படி பேசுவாய் என்று கூறிப் பழக்குவேன்.

(வி - ம்.) கிளியின் நிறம் பச்சையாதலால் பசலைபோர்த்த அவள் உடம்பும் கிளியின் உடம்புக்கு ஒக்கும் என்றாள். மாம்பழம் இனிய சொல்லையும் கோவைக்கனி இதழினையும் ஈரப் பலாப்பழம் கொங்கையையும் உணர்த்தும். குழையும் அனம் உண்டு-குழைந்த சோறு உண்டு; குமப்பிய பால் - சோறு பழம் இவற்றைக் குழப்பிய பால். தெளிபால் - தெளிந்த நல்ல பால். இவை உண்டு என்று மற்று ஒருபொருள் தோன்றுதல் காண்க. உருப்பசி ஆய் - ஊர்வசியாகிய தாய். என்ன நலம் காட்டுவேன் - என்று (பிறர் கூறும்படி) உன் அழகைக்காட்டு வேன் என்று மற்றொரு பொருள் தோன்றும் நயம் காண்க. அரசு, ஆல், அத்தி என்ற மரப் பெயர் தோன்றும் நலம் காண்க பாசம் தொலையப்பேசு என்றே பயிற்றுவேன் என்று கொண்டுகூட்டுக.

199—204 : ஈடுபட்ட...கோடியாரும் போவாரோ கூறாய்

(சொ - ள்.) வலிமையழிந்த வெள்ளை நிறமுடைய அன்னத்தைத் தூதுவிட்டால் முன் உச்சிக்கொண்டை யுடையவர் (அன்னப்பறவையார்) துணிந்து சொல்வாரோ? கூடுகட்டி அன்பாய் வளர்த்த தாயர்க்கு உதவி செய்யாமல் விட்டுப் பிரிந்துவந்த குயில் என்னிடத்திற் கருணை வைத்துத் தூதுசெல்லுமோ? தன் பேர் அரி என்று சொன்னால் அஃது அளி என்று சொல்லும் சிற்றுக்களை யுடைய வண்டு ஒன்றாகப் பேசிவருமோ? எனக்குக் காதலை மிகச் செய்கின்ற வலிய எமனிருக்கும் திசையில் உள்ள பொதியமலையிலிருந்து வருந் தென்றற்காற்றும் என் காதலை அழகர்க்குக் கூறுமோ? திருமகள் காதலிக்கும்

வண்டு மொய்க்கும் பூமாலை புனைந்த பெருமாளுக்கு முன் பெருமையாகிய பூமியெல்லாம் மழையைத் தூற்றுகின்ற மேகத்தையும் தூதுவிடக்கூடுமோ? தான் எடுத்து உண்ட ஏழுலகங்களையும் காக்கும் உயர்ந்த கருணையுடையவர் ஆகிய பெருமாளுக்கு முன்னே காக்கையாரும் போவாரோ? ஆய்ந்து நீயே சொல்வாய்.

(வி - பெ.) ஈடுபடுதல் - வலி குறைதல். சூடு பட்டவர் - சுடப்பட்டவர் என்பது மற்றொரு பொருள். கோகிலம் - குயில். இதனை வளர்த்த தாய் காக்கை. குயில் காக்கையின் கூட்டில் முட்டையிடுவதும், காக்கை அடைகாத்துக் குஞ்சு பொரிப்பதும் பின் இறகு முளைத்தவுடன் காக்கைக் குஞ்சுகளைவிட்டுக் குயிற் குஞ்சு பிரிந்துபோய்விடுவதும் இயற்கை. அதனால் "வளர்த்த தாயர்க்கு உதவாத கோகிலம்" என்றார். தாய்க்குதவி செய்யாதவர் பின் யார்க்கேனும் உதவி செய்வாரோ! செய்யமாட்டார் என்று காரணங்காட்டி 'உதவி செய்யாத குயில்' என்றார். வண்டு மதுவுண்பதனால் வாய் குழறும். அரி என்று சொன்னால் அதை அளி என்று சொல்லும். இவ்வாறு பேசும் வண்டு எப்படித் தூது சொல்லும்? சொல்லாது என்பது. தென்றற் காற்று என் காதலை மிகச் செய்கின்றது; எமனுடைய திசையில் இருக்கிறது. மலையில் மறைந்திருந்து என்னை வருத்துவதற்கு வருகின்றது. இத் தன்மையையுடைய தென்கால் என் காதலை நீக்குவதற்குத் தூதாக வருமோ? மாதரையெல்லாம் தூற்றும் - பெண்களை வெடுத்துப் பழி தூற்றுகிறது. அந்த மேகத்தை எவ்வாறு தூதுவிடலாம் எனத் தொனிப்பொருள் கொள்க. கொடி காக்கை. ஆர்: பலர்பால் விகுதி: இவ் விகுதி சேர்ந்து கொடியார் என நின்றது. கொடியார் - கொடுமை செய்வோர் என்பது மற்றொரு பொருள். கருணையுடையான் முன்னே தீயவர்கள் செல்வார்களா? செல்லமாட்டார் என்று பொருத்துக. "இயம்புகின்ற காலத்து எகினம் மயில் கிள்ளை, பயம்பெறு மேகம் பூவை பாங்கி - நயந்தகுயில், பேதைநெஞ்சம் தென்றல் பிரமரமீரைந்துமே, தூதுரைத்து வாங்குந் தொடை" என்று தூதுக்குரிய பொருள்களைக் கூறியிருப்பதில் காக்கை கூறப்படவில்லை. ஆயினும், வடமொழியிற் காகசந்தேசம் என்னும் ஒரு நூல் இருந்தலால் தூதுக்கு உரிய பொருளாகக் கருதினர் எனத் தெரிகிறது.

### 204—209: அடியார்....வருவாய்

(சொ - ள்.) நீ தூதுசென்றால் அழகர் அண்மையில் அடியார்கள் இருந்தால் அவர்கட்குத் தக்வாறு கீர்த்தனம்

பாடுவாய்; அடுத்து நாச்சியார் பக்கத்தில் இருந்தால் அவர் கையின்மேற் பறந்துபோய் அமர்ந்துகொள்வாய்; "எங்கிருந்து வந்தாய்" என்று வினவினால் திருமாலிருஞ் சோலைமலையிலிருந்து என் தந்தையே! உன்னைத் தொழு வதற்காக வந்தேன் என்று கூறுவாய்; அந்தச் சௌந்தர வல்லி என்ற தன் வடிவமுள்ள நாச்சியார்க்கும் மகிழ்ந்து பூமாலை சூடிக்கொடுத்த நாச்சியார்க்கும் கடுகு அளவு சிவந்த கோபமும் வாராமல் தெலுங்கிலே என் காதலை அவர்க ளுக்குத்தோன்றாமல் அழகர்க்குமட்டும் வகைமாக எடுத்துச் சொல்வாய்; என்னை வருத்துகின்ற துன்பத்தைத் தொலைப்பாய்; அழகர் அணிந்திருக்கின்ற மணம் வீசும் துளசிமாலையை வாங்கிக்கொண்டு வருவாய்;

(வி - ம்.) அடியார்களிருந்தால் அவர்களுடன் சேர்ந்து கீர்த்தனம் பாடவும், நாச்சியார் இருந்தால் அவர் முன் கையில் அமர்ந்திருக்கவும், அழகர் வினவினால் நின்னைக் கண்டு வணங்க வந்தேன் என்ற கூறவும், சவுந்தரவல்லியும் கோதைநாச்சியாரும் இருந்தால் அவர்களுக்குத் தெரியாமல் வடுகிலே அழகர்க்கு என் காதலைக் கூறவல் வல்லை நீ. ஆதலால் உன்னையே தூதாக விடுக்கத் துணிந்தேன் என்பது கருத்து. சவுந்தரவல்லி என்பது அத் தலத்துள்ள நாச்சியார் பெயர். உவந்து+அலர்—உவந்து- விரும்பி. அலர் - மலர். கடுகு+இலேசம்=கடுகின் அளவு- அடு இலேசம்-வருத்தும் துன்பம். கொங்கு - வாசனை, எடுக்கும்- வீசுகின்ற; தாமம் மாலை.

209—213: அங்கு அடுக்கின்....புளி தானும் உண்டு

(சொ - ள்.) அங்கே நீ செல்வதற்கு அடையாளங் கூறு கின்றேன் கேள், கிரேதாயுகத்தில் ஆலமரமாகவும், திரேதா யுகத்தில் அரசமரமாகவும், துவாபரயுகத்தில் வில்வமர மாகவும். கலியுகத்தில் புத்திரதீபம் என்ற மரமாகவும் தோன்றித் தேவர்கட்கு ஆருவது தருவாய்த் தெய்வத்தின் ஆற்றலைத் தருகின்ற ஒரு மரம் அங்கு உண்டு. நெருங்கிய ஒருகோடிக்கணக்கான சோலைகள் அங்கே உள்ளன, ஒருகோடிக்கணக்கான ஆறுகளும் உள்ளன, ஒருகோடிக் கணக்கான அழகிய சுனைகளும் உள்ளன. திருமாலின் வைணவசமயத்திற்கு உரிய அறத்தின் வழுவாது நிற்கும்

யோகியர்களைப்போல் இரவும் பகலும் உறங்காத புளிய மரமும் ஒன்று உண்டு.

(வி - ம்.) யுகம் உகம் என்று மருவி வழங்குவதால் ஓர் உகம் என்றார். மூன்றாவது யுகத்தில் பலாமரமாகவும், நான்காவது யுகத்தில் புத்திரஜீவி என்ற மரமாகவும் இருந்தது என்று இத் தலபுராணம் கூறும். இந்நூலாசிரியர் வில்வமாகவும், புத்திரதீபமாகவும் கூறியிருப்பதற்குக் காரணம் தோன்றவில்லை. இந்த தருக்கள் தேவருலகத்தில் இருப்பதனால் இதனை ஆரூர்தருவாக நினைத்துவந்து வணங்குவர் என்பது. ஒரு கோடி எனபது மிகுதியைக் குறிக்க வந்தது. வைணவதருபத்தின் வழுவாத யோகியர் திருமாலையே நினைந்து தியானித்து இருப்பார்; இரவும் பகலும் உறங்கமாட்டார். அவர்களைப் போல இலைகள் எப்போதும் விரிந்தேயிருக்கும் புளியமரம் அங்குள்ளது. திருமங்கையாழ்வார் குமுதவல்லியுடன் வந்து பதிகம் பாடித் துதித்தபோது உறங்காப்புளி வைக்கப்பட்டது என்பது செவிவழிவந்த செய்தியாம்.

## 213—215: திறம்சேர்...இனிது இறைஞ்ச

(சொ - வ்.) தந்தை தன் மைந்தனுடன் வந்து தங்கியிருக்கும் தன்மை விளங்கும்படி பிரமன் அங்கு வந்து சீர்த்திமைக் கூறி வாழ்த்தவும், எக்காலமும் நிலைமையாக வாழும் உபேந்திரன (திருமால்) அவ்விடத்தில் (தேவருலகத்தில்) இல்லையென்று எண்ணி இந்திரன் வந்து இனிமையாய் வணங்கவும், ஆர்த்த திருவோலக்கமாயிருப்பன் (230) எனக் கூட்டுக.

(வி - ம்.) பிதா - தந்தை. பிதாமகன் என்பது பிரமனுடைய பெயர். இந்திரனுக்குத் துணையாக ஒருகாலத்தில் உபேந்திரனாயிருந்து விண்ணுலகத்தை யாண்டார் என்பது திருமால் வரலாற்றில் ஒன்று. திருமால் அங்கில்லை என்று தேடி வந்தது போல இந்திரன் வந்தான் என்பது கருத்து.

## 215—230: பிந்திய தம்பியர்....திருவோலக்கமாயிருப்பன்

(சொ - வ்.) பின்வந்த தம்பியர் மூவருக்கும் தாமே தம்முடைய அரசாட்சியைக் கொடுத்த நம்பியாகிய அழகருடைய சிறந்த பாதங்களையே நம்பி வாழ்பவர் ஆகிய கொடிய பிறவியில் எடுத்த உடம்பைத் தாங்கமைசெய்து வணங்கும்

சிங்கராசபட்டர் என்று பெயர் விளங்கிய அர்ச்சகரும், மயக்கமுற்ற இருளைப்போன்ற மலம், மாயை, கன்மம் என்ற மூன்றும் நீங்குவதற்குச் சிவந்த கையில் உயர்ந்த மூன்று தண்டங்களை யேந்தி ஐயம் நீங்க யாவருக்கும் எடுத்துக் காட்டுகின்ற "திருமாலிருஞ் சோலைச் சீயர்" என்று உலகத்திற் புகழ் விளங்கத் தோன்றிய பெருந்தவத்தை யுடையவரும், பொய்யில்லாத ஞானவிளக்கைக் காட்டி, நல்வழியைக் கூறுவதற்கு ஒப்பாகத் திருவிளக்கைக் காட்டி வந்து நின்று முற்காலத்தில் முத்தமிழ்ப் பாடலைக் கேட்டு அதன்படியே பின் சென்றவர் ஆகிய பெருமாள் முன்னே போக, அவர் பின் சென்ற ஐயன் ஆகிய திருமாலைபாண்டா னும், அன்பினால் இவ்வுலகமானது மேகமபோன்ற கரியநிற முடைய திருமாலையே துதிக்க வரும் தோழப்பையங்காச் என்ற ஆசாரியரும், உண்மையன்புடைய அடியார்கள் யாவரும் தேவராக வேண்டுமென்று நாடோறும் வணங்கும் பட்டர்கள் ஆகிய வேதபாரகரும், திருமால் ஆகிய ஒளியின் கருணைக்கடலிற் குளிக்கின்ற கைகால் முதலிய உறுப்பு களுடன் வந்த அழகார் என்பவரும் பழைமையான உலகத் தில் குளிர்ந்த அழகிய துளசிமாலை புனைந்த அழகர் தங்கும் திருவேங்கடமலை போலப் பொருந்திய திருமலை நம்பி என்ப வரும், மனத்தின் உள்ளே மிக்கும் மயக்கத்தைக் கெடுக் கின்ற சோலைமலையையே நம்பி வாழ்வதாற் சோலைமலை நம்பி என்ற பெயர்பெற்ற தூயவரும், பழைமையான பிரமன் முதலிய தேவர்கட்கும் திருமாலின் பிரசாதத்தைத் தருகின்ற 'சடகோப நம்பி' என்பவரும், பெரிய சிறப்புடைய எழுத்துகளை எழுதிப்படித்த திருமாலிருஞ் சோலைப் பிரியர் என்ற புகழ்பெற்ற கணக்கரும, அம் மலையிலிருந்து எல்லாரையும் ஆள்கின்ற கடவுளின் கருணையையே துணையாகக்கொண்டு எப்போதும் கோயிற்பணி செய்கின்ற மூதன்மையுடையவர்களும் ஆகிய யாவரும் பாதத்தை வணங்கும்படி ஆரவாரமுடைய திருவோலக்க மண்டபத்தில் அமர்ந்திருப்பார் (அழகர்).

(வி - ம்.) அரசு ஈந்த நம்பி என்ற குறிப்பினால் நம்பியர் ஆகிய பரதனையும், சுக்கிரீவனையும், விபீடணனையும் உணர்த்

தியது. பரதனுக்கு அயோத்தி யரசினையும், சுக்கிரீவனுக்குக் கிட்கிந்தை யரசினையும், விபீடணனுக்கு இலங்கை யரசினையும் ஈந்தான் என்பது காண்க. இம் மூவரையும் தன் தம்பியாகவே இராமன் கொண்டான் என்பது "குகனொடு மைவ ரானேம் முன்புபின் குன்றுசூழ்வான், மகனொடு மறுவ ரானேமெம் முழையன்பின் வந்த அகனமர் காதலைய நின்னொடு மெழுவரானேம், புகலருங் கானந் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை" (கம்ப. விபீ.கசச) என்ற பாடலால் தோன்றும். திருத்தாளை நம்பினோர் ஆகிய அர்ச்சகரும், யாதவரும்.....நாயகரும் எனக் கொண்டு கூட்டுக பவித்திரம் - தூய்மை, சீரங்கராச பட்டர் என்பவர் முதலில் அர்ச்சகராக வந்தவர்; அவர் முதலாக வரும் அர்ச்சகர் யாவருக்கும் அப்பெயரே வழங்கும் எனத் தெரிகிறது. மணவாள மாமுனிகள் காலத்தில் சீயர் என்பவர்க்கு ஓர் இடம் ஏற்படுத்தப் பட்டது. அன்றுமுதல் சீயர் கோயிலில் இடம் பெற்றுள்ளார். இவர் மும்மலமும் நீக்குவதற்காக மூன்று தண்டுகள் ஏந்தியிருப்பர் என்றும் வைணவ சமயத்தில் ஐயம் உண்டானால் இவர் அதனை நீக்கித் தெளிவுண்டாக்குவர் என்றும் முனிவர் போலவே இருப்பர் என்றும் அறியலாம்.

முத்தமிழ் - இயல், இசை, நாடகம் என்பன. இங்குத் திருமழிசையாழ்வார் பாடிய (கணிகண்ணன் என்ற) பாடலையுணர்த்தியது. பாடலின் பின் சென்றவர் திருமால். அத்தன் - தலைவன்; முதல்வன். அத்தனாகிய திருமலையாண்டான் எனக் கூட்டுக. திருமலையாண்டான் என்பவர் உடையவர் ஆகிய இராமானுசருடைய ஆசிரியர்களுள் ஒருவர் என்றும், முதலில் இவர் இத் தலத்தில் இருந்தனர் என்றும், பின் அழகர் நல்லா குளம் கோயில் கொண்டபோது அழகருக்குப் பின்னே வந்து நல்லாகுளத்திலேயே தங்கினர் என்றும் தெரிகிறது. இவ்வரலாறு ஆராயத்தக்கது. சிட்டர் - நல்லொழுக்கமுடையவர். வேதபாரகர் - வேதத்தை மனத்தில் தாங்கியவர். விட்டு - திருமால். சோதி - ஒளி. கருணைக்கடல் - அருளாகிய கடல். இஃது உருவகம். கரம் + சரணம + ஆதி = கரசரணாதி-கை கால் முதலிய உறுப்புகள். அமுதார் - பாசாரக முதல்வர். இவருடைய திருவுருவம் நம்பிள்ளை சந்நிதியில் உள்ளது என்பர். திருமலை - திருவேங்கடம் இது திருமாலுறையுள் ஆக இருப்பதுபோலத் திருமலை நம்பிகளும் அவர் உறையும் இடமாயிருப்பவர் என அவர் பத்தியை விளக்கிடுது இது. திருமலைநம்பிகள் மண்டபப் பள்ளிப் பணியாளர்க்குத் தலைவர் எனத் தெரிகிறது. சோலைமலை நம்பி என்பவர் ஒருவர். இவர் அழகர் சந்நிதிப் பணியாளரிற் கூடியிருப்பவர். திருமாலிருஞ்சோலைப் பிரியர் என்பவர் கோயிற்கணக்கர். சீகாரியஞ் செய்நாயகர், கோயிற்பணியாளர்க

னாகிய முதல்வர் பலரையும் குறிக்கும். திருவோலக்கம் - சிறந்த சமூகம்; சிறந்த அடியாருடன் கூடியிருப்பது.

230—234 : அப்பொழுது உன்...உண்டாகும் காண்

(சொ - ள்.) அவ்வமயத்தில் நீ என செய்தியை எடுத்துக்கூறினால் அஃது அழகர் திருச்செவியில் ஏறாது, பள்ளியறைக்கு மெள்ள அவர் எழுந்தருளும் வேளை பார்த்து ஒருவரேனும் எழுந்து ஒரு செய்தியையும் சொல்லாத நல்ல அமையம் பார்த்து நீ சொல்லுக, எல்லாரையும் வென்ற மன்மதன் மலரம்புகளை என்மேல் தூற்றிப் போர்புரிவதற்கு வருமுன்னும், அயலார் வம்பாக என்மேல் பழிதூற்றுவதற்கு முன்னும், குடத்திற்பிறந்த முனிவன் வாயின் முன் நுரையாக அடங்கிய கடலின் ஒலி அடங்கவும், என் செவிலித்தாயின் அதட்டுஞ் சொற்கள் அடங்கவும் கிளியே! நீ தூது சொல்வாயாக, உன் பெயர் சுவாகதம் என்று எங்கும் கூறுவதால் உனக்கு அப் பெயர்ப் பொருளாகிய அன்பின் எழுச்சியாகிய நல்வரவுங் கூறி வரவேற்பார்.

(வி - ம்.) சேர்த்தி - சேரும் இடம். இது படுக்கையறையை யுணர்த்தியது. சொல்ல: வியங்கோள்: அகர விகுதிபெற்று நின்றது. செய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக்கொண்டு "சுவாகதம் உண்டாகும்" (234) என்ற வினைமுற்றைக்கொண்டு முடிந்ததாகக் கூறுவதும் பொருந்தும். சொல்லாமுன் சொல்ல எனக் கூட்டுக. அம்பு + அலர் = அம்பலர். இதனை அலர் அம்பு என மாற்றிக்கொள்க. அலர் - மலர். மன்மதனுக்குத் தாமரை, முல்லை, அசோகு, நீலம், மாம்பூ ஆகிய ஐந்து அம்புகள் என்று காண்க. அவற்றில் தாமரை காதலரை நினைக்கும்படி செய்யும்; மாம்பூ உடம்பிற் பசலையை யுண்டாக்கும்; அசோகம்பூ, உணவையெல்லாம் வெறுக்கும்படி செய்யும்; முல்லை மலர் படுக்கையிற் கிடக்கும்படி மயக்கமுண்டாக்கும்; நீலமலர் கொன்றுவிடும் என்று அம்பின் செயல்கள் கூறப்பட்டுள்ளன. "நினைக்கு மரவிந்தமீன் பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கு மசோகு - வனத்தின் துற, முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலம், கொல்லுமத னம்பின் குணம்" என்ற வெண்பாவைக் காண்க. வம்பலர் - அயலார். தூற்ற என்பது பழியை எடுத்துச்சொல்ல என்னும் பொருளைத் தந்தது. வாயில் நுரையாகவடங்கிப் பின் வந்த கடல் என்க. இந்திரன் தன் பகைவன் ஆன விருத்திராசுரனோடு போர்புரிந்தபோது அவன் கடலின் உள்ளே மறைந்துகொண்டான். இந்திரன் உள்ளே மூழ்கித் தேடியும் கண்டிலன். பிரம

னிடம் இச் செய்தியைக் கூறினன்; பிரமன் அகத்திய முனிவர்பாற் சென்று கூறும்படி பணித்தான். அவ்வாறே இந்திரன் அகத்தியர் பாற் கூறினன்; அகத்தியர் கடல்நீர் முழுவதும் உள்ளங்கையில் வரச்செய்து உழுந்தளவாக்கி உண்டனர். பின் அவ்வசுரனிருக்கும் இடம் அறிந்து இந்திரன் கொன்றான். கொன்றபின் அகத்தியர் உண்ட கடனீரை உமிழ்ந்து பண்டுபோற் பெருகச் செய்தார் என்பது வரலாறு. திருவிளையாடற் புராணம் இந்திரன் பழிதீர்த்த படலம் பார்க்க. 'கைதவன் கரந்துவைகும் கடலை வெற்படக்குங் கையிற், பெய்துழுந் தெல்லைத் தாக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி, யையன தருளைப் பெற்றார்க் கதிசய மிதென் கொன் மூன்று, வையமுந் தொழிலுஞ் செய்ய வல்ல ரவரே யன்றோ'' என்ற பாடலையும் காண்க. காதல் கொண்டவர்க்குக் கடல் முழக்கம் பகையாம். வளர்த்த தாய் அயலான்மேற் காதல் கொண்ட புதல்வியைச் சினந்து பேசுவது இயல்பு. மணமுடித்துக் கொண்டாற் பின் அத் தாயின் உரை அடங்கும். அது குறித்துந் ''தாயின் உரையடங்க'' என்றார். சுவாகதம் என்பது கிளியின் பெயர்களுள் ஒன்று. சுவாகதம் – நல்வரவு. இது வடமொழியில் உள்ள பொருள் எனத் தெரிகிறது. அன்பு+எர் எனப் பிரித்து, அன்பு எழுச்சி எனப் பொருள் கொள்க. காண் : அசை ; பார் எனவும் பொருள் கொள்ளலாம்.

234—239 : முன்பு ஒருகாள்...மருமாலை நீ வாங்கி வா

(சொ - ள்.) முன் ஒரு காலத்தில் கோசலை கையில் வளர்ந்த தலைவனாகிய இராமனே (கிளியாகிய) உன்னைப் புகழ்ந்து பேசினன் என்றால் யார்தாம் உன்னைப் புகழ்ந்து பேசாமலிருப்பார்கள் (எல்லாரும் புகழ்ந்து பேசுவர்) அன்புடன் எமக்குரிமையாகிய திருமாலை நோக்கி, அவர் புனைந்திருக்கும் இரு தோளில் உள்ள பூமாலையை முதலிற் கேள்; பின் உங்களுடைய பூமாலையை நீங்கள் வழங்காவிடினும் எம் அன்னையாகிய சிறந்த கோதைநாச்சியார் சூடிக் கொடுத்து வரவிடுத்த பூந்தாது நிறைந்த மாலையையாவது தாருங்கள் என்று கேட்பாய், நீண்ட காலமாகத் தம்மிடத்தில் அடுப்பவர் எல்லார்க்கும் ஆடித்திங்களில் வேண்டும் வரம் தரும் அழகன் இல்லையென்று சொல்லமாட்டான். ஒருவராலும் தடுத்தற்கு அரிய மயக்கத்தைப் போக்கும் அழகனது புயத்திற் புனைந்திருக்கும் மணம் வாய்ந்த மாலையை நீ வாங்கி வா.

(வி-ம்.) சீதை தான் வளர்த்த கிளிக்கு 'யார் பெயர் இடலாம்' என்று இராமனைக் கேட்க, அவன் தன் அன்னையாகிய கைகேசி பெயர் இட்டு அழைக்கச் சொன்னான். இக் கூற்று இராமனுக்கும் சீதைக்கும் மட்டும் தெரியும் மறைமொழி. அனுமானிடம் சீதை கூறும்போது இம் மறைமொழியை வெளிப்படுத்தி இதனை ஓர் அடையாளமாகக் கூறினள் என்பது கம்பராமாயண வரலாறு. செய்யுள் "என்னொ டின்னுயிர் மென்கிளிக் கியார்பெயரிடுகேன், பன்ன வென்றலு மாசறு கேகயன் மகளேன், அன்னை தன்பெய ராகென வன்பினொ டன்றாட், சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி மெய்ம்மை தொடர்ந்தோய்" (சூளாமணிப். 58.) இதனைக் குறித்து இங்கே "இராமன் கிளியைப் புகழ்ந்து பேசினான்" என்றார்; மாலை: வேற்றுமை மயக்கம் - மால் பால் என ஏழனுருபு விரிக்க. மாலைகேள்: இரண்டனுருபுத் தொகை; மாலையைக்கேள் என விரித்துக்கொள்க: அம்மை - தாய். அம்மையாகிய திருக்கோதையார் என இருபெயரொட்டுப் பண்பு ஆக்குக. தாத+ஐ+ஆர்=மகரந்தத்தைப் பொருந்திய. தாதையார் மாலை என்பதற்குப் பெரியாழ்வார் சாத்திய மாலை எனவும் கூறலாம். ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலையை அவருடைய தந்தையார் ஆகிய பெரியாழ்வார் கொண்டுபோய்ச் சாத்துவது வழக்கம் ஆதலால், தாதையார் என்பது கோதையின் தாதையாரையுணர்த்தியதாகக் கொள்க. தாதையார் - தந்தையார். திருவிழாக்காலத்தில் வில்லிபுத்தூரிலிருந்து கோதை சூடிய பூமாலை அழகர் கோயிற்பூசைக்கு வருவது வழக்கம். அதனையுட்கொண்டு இங்ஙனம் கூறினர் எனக் காண்க. தம்மின்: முன்னிலைப்பன்மை வினைமுற்று, தா+மின்; மின் விகுதிபெற்றுப் பகுதி முதல் குறுகித் தன்னொற்று இரட்டி முடிந்தது. அழகருக்கு ஆடித்திங்களிற் சிறந்த திருவிழா முன்னர் நடைபெற்றது என்றும் பின் அது நடைபெறாமல் நின்றது என்றுங் கூறுவர். அதுகுறித்து, "ஆடித்தியாகம் கொடுப்பவன்" என்றார். 'வள்ளல் இல்லையென்று கூறான்: உடனே வழங்குவான்; நீ அதனை வாங்கி வா' என்றாள். தடுக்கும் அருமால் என்பதைத் தடுப்பதற்கும் அரிதான மால் எனப் பொருள் கொள்க. உம்மை இழிவு சிறப்பு. எவர் மனத்திலும் எழும் மயக்கத்தையெல்லாம் நீக்கும் அழகன் என் காமமயக்கத்தையும் நீக்கக் கருதுவான் என்பது குறிப்பு. மரு - வாசனை. மருமாலை, மருவையுடைய மாலை என இரண்டனுருபும் பயனும் விரிக்க. வா என்பது முன்னிலையொருமையேவல் விகுதி குன்றிப் பகுதிமட்டும் நின்றது.

முற்றிற்று.

---